...ாத்தனத்தார் அங்கீகரித்தது

ஆழ்வார்

# ஸ்ரீ குலசேகரர்

R. அரிஹரமையர்
இயற்றியது



...ர. சிதம்பர முதலியார் பிரதர்ஸ்.,
மதராஸ் & மதுரை

...செய்தது] 1930 [விலை அணா 6

## வித்தியாரத்நாகர தமிழ்ப் பாடப் புத்தகங்

இப்பாடப் புத்தகங்கள் சென்னை வித்தியா இ
விதிகளை அநுசரித்து தற்காலமாணவர்கள் எளிதிற்
யும்பொருட்டு தாவர வர்க்கங்கள் நீர்வாழ், நிலவாழ்
ணிகள், துரைத்தன விளக்கப்பாடங்கள், வானசாஸ்.
இயற்கைப் பொருட்பாடங்கள், பூமி சாஸ்திரம், ரசா
சாஸ்திரம், இதிகாசபுராணங்கள், ஆங்காங்கே நீதிபோ
கள் வகுப்புக்குத் தக்கவாறு அமைத்து எழுதப்பெற்

| | | |
|---|---|---|
| வித்தியாரத்நாகர தமிழ் முதல் பாடம் | | 0—2— |
| ஷை | இரண்டாம்பாடம் | 0—3— |
| ஷை | மூன்றும்பாடம் | 0—3— |
| ஷை | நான்காம்பாடம் | 0—4— |
| ஷை | ஐந்தாம்பாடம் | 0—6— |

---

## நல்லொழுக்கக் கோவை நீதிக்கதைகள்

சோமசுந்தரம் பிள்ளை அவர்கள்

இயற்றியது

இரண்டாம் வகுப்பு முதல் ஐந்தாம் வகுப்பு முடிய

உபபாடமாக வைக்கக்கூடிய

(Non-Detailed Study) புத்தகங்கள்

| | |
|---|---|
| உலகநீதி நீதிக்கதைகள் | 0—2— |
| ஆத்திச்சூடி நீதிக்கதைகள் | 0—2— |
| கொன்றைவேந்தன் நீதிக்கதைகள் | 0—2— |
| வெற்றிவேற்கை நீதிக்கதைகள் | 0—3— |

# ஆழ்வார்

# ஸ்ரீ குலசேகரர்

V. வெங்கடராமன்







பி. நா. சிதம்பர முதலியார் பிரதர்ஸ்.,
மதராஸ் & மதுரை

[ரிஜிஸ்தர் செய்தது] 1930 [விலை அணா 6

# முகவுரை

சேர தேசாதிபதியும் முத்தமிழ் நாடுகளோடு வேறுசில நாடுகளுக்கும் உத்தம சக்கரவர்த்தியும், இக்கடையுகத்தில் முதல்யுகம் வந்து விட்டதோ என்னும்படி அரசியற்றியவரும், பூர்வ புண்ணிய விசேஷத்தால் உலக வாழ்க்கையில் வெறுப்புற்றுப் பரகதிக்கு ஏதுவான ஸ்ரீராமபக்தியிலீடுபட்டு ஸ்ரீவான்மீகி ராமாயணத்தையே ஆத்மாமிருதமாக நிரந்தரம் பானம் பண்ணி வந்தவரும் திருவரங்கமுதலான திவ்விய க்ஷேத்திர யாத்திரை செய்து பரமபக்தராய் ஆழ்வார்களுள் ஒருவராய் விளங்காநின்றவரும் ஸ்ரீபெருமாளுமான ஸ்ரீகுலசேகர ஆழ்வாருடைய திவ்விய சரித்திரத்தைக் கூறும் நூல்கள் சிலவேயாம். இவைகளும் சம்பிரதாயச் சொற்றொடரோடு வெகு சுருக்கமாகவு மிருக்கின்றன.

இந்நூல் படிக்கப்படிக்கத் தீராத அன்பினைக் கொடுக்கக் கூடியதான கற்பனாலங்காரங்கள் அரியபெரிய நீதிகள் பக்திமுதலானரசங்கள் பண்டைகாலத்தோடு தற்காலத்திய உலகவழக்க ஒழுக்கங்கள் ஆகிய இவைகளோடு ஆற்றொழுக்கான போக்கில் அமுதமயமான சொற்றொடரால் நிரம்பப் பெற்றிருப்பது மிகவும் வியக்கத்தக்கதேயாம். இவ்வாழ்வார் சரித்திரம் போல் மற்றைய ஆழ்வார்களின் சரித்திரங்களும் வெளிப்படுமாயின் எவ்வளவோ நன்மைகளை இத்தமிழுலகம் எய்தா நிற்குமென்பது எனது துணிபு.

இவ்வாழ்வார் பரமபதத்துக் கெழுந்தருளிய தலமாகிய அம்பாசமுத்திரம் தாலூக்காவுக்கடுத்த மன்னார்கோவிலிருக்கிற ஸ்ரீகுலசேகர ஆழ்வார்கோயில் மதில்களிலுள்ள சிலாசாஸனங்களையும் இந்நூலின் பிற்பாகத்தில் சேர்ந்திருப்பதானது சரித்திர ஆராய்ச்சி செய்வார்க்கு மிகவும் உபயோகமாயிருக்குமென்பதிற்றடையில்லை.

ஆக்கியோன்



ஆழ்வார் ஸ்ரீ குலசேகரர்

# ஆழ்வார் ஸ்ரீ குலசேகரர்

## முதற்பாகம்

மலையாள தேசத்திலே கோல்லி என்னும் நகரத்திலே "திடவிரதர்" என்றோர் அரசரிருந்தார். அவர் தமது ஆளுகைக்குட்பட்ட பிரஜைகளையெல்லாம் தாய்போல் போஷிப்பவர். தகப்பனைப்போல் நன்மைகளெல்லாம் பகுத்தளித்து அவைகளை அவர்கள் அனுபவித்து மகிழ்வதைக் கண்டு தாமும் ஆனந்திப்பவர். குடிகள் ஞாயமாக விரும்புவதை விரைந்தளித்தும் அவர்கள் வெறுப்பதை உடன் நீக்கியும் வந்தார். இப்படி இவர் அவர்களுடன் மனங்கலந்த பிரியத்துடன் நீதிநெறி தவருது செங்கோல் செலுத்திக் கொண்டுவந்ததால், அவரது ஆளுகை, மறுவற்ற "இராம ராஜ்யபாரம்" என்றுசொல்லும்படி சகல விஷயங்களிலும் மேன்மைபெற்று விளங்கியது.

தருமப்பிரபுவாகிய இப்படிப்பட்ட வேந்தர்க்கும் வெகுகாலம்வரை சந்ததியில்லாமலிருந்தது. பிள்ளைப்பேற்றினை யுத்தேசித்து, அவர் செய்து

வந்த தான தர்மங்களும் பலவாகும். சிலகாலஞ் செல்லுகையில் தாம்செய்துவந்த அறத்தின் பயனோ? அல்லது குடிஜனங்களின் ஆசீர்வாதத்தின் பிரயோஜனமோ? யாதோ? யாமறியோம், அந்த நராதிபரது பட்டத்துமனைவி, நற்குண நற்செய்கைகளெல்லாம் ஒன்றிக்கலந்து ஓர் உருவெடுத்தாலனைய, ஓர் ஆண்மகவை நல்ல சுப முகூர்த்தத்தில் பிரசவித்தனள். ஜனனமான குழந்தை ஆணாயிருத்தலைக் கண்ட திடவிரதர் அடங்காத மகிழ்ச்சியொடு கூடினவராய்க் “குலசேகரன்“ என்று அக்குழவிக்கு நாமகரணஞ் செய்து, தந்நாட்டிலுள்ள சகலபிரஜைகளையுந் தருவித்து, அவரவர்க் கேற்றவாறு பரிசில்கள் நல்கினர். ஏழைகளுக்கும் அங்கஹீனர்களுக்கும் சோறுந் துணியுங் கொடுத்து மகிழ்வித்தனர். வந்திருந்த குடிமக்களும், இளவரசரின் பிறப்பினால், தமக்குண்டாயிருக்கும் அகம் நிறைந்த களிப்பினை முகம்பொழிந்த மகிழ்ச்சியினால் அரசருக்கறிவித்துத் தமதிடஞ் சார்ந்தனர்.

இளவரசராகிய குலசேகரரும், பரிசுத்தவான்களுக்குக் கொடுக்கப்பட்ட தானத்தின்பயனே போல், நாளொருமேனியும் பொழுதொரு வண்ணமுமாக, வளர்வதானார். இங்ஙனப்புறத் துறுப்புக்கள் பொலிந்து வளர்தல்போல அகத்

றுப்பாகியதர்மம், நீதி, சாந்தம், ஆஸ்திகபுத்தி முதலான நற்குணங்களும் மேன்மேலும் விருத்தி யாய்க்கொண்டு வந்தன, சிறுவர்க்கு வயது ஐந்தா வதுகண்டு அவர்க்கு நல்லாசிறிய ரொருவரை நியமித்துக் கல்விகற்பிக்குமாறு திட்டஞ் செய் தார் காவலர். குருவும் மாணாக்கரது பருவம் நோக் கிப் "பஞ்சிட்டுப்பாரம் ஏற்றுவதுபோல்" அரு மையான கலைகளனைத்தையும் பையப்பையக் கற் பிக்கத் தொடங்கினர். குருகுல வாசம்செய்யப் புகுந்த சிடரும்,

"நில்லெனில்நிற்பார் ஆசான் நீழலிற் பிரியார் நாளும்
செல்லெனிற் செல்வார் என்றுஞ் செய்வன செய்தே தீர்ப்பார்
சொல்லெனிற் சொல்வார்பாடஞ் சொன்னதுகொண்டு வேறுங்
கல்லெனிற் கற்பார்கற்ற கல்வியை மறத்தல் செய்யார்"

"யானையுந்தேரு மாவும் அணிபெற வகுத்தலோடு
சேனையும் நடாத்தல் கற்றார் சிலையெழுவாள் வேலாதி
ஏனையகலங்களியாவும் ஈதிரறப்பயிறல் செய்தார்
ஊனையு முருக்கும் வாக்கால் உலகெலாமுய்தல் செய்வார்"

இங்ஙனம் சகல சாஸ்திரங்களிலுந் தமது குமாரர் தேர்ச்சி பெற்று விளங்குதலைக் கண்டு, திடவிரதர் களிப்பென்னுங்கடலில் மூழ்கினர். உலகத்தில்வித்துவானைப்பெற்ற பெற்றோர்க்குண் டாகும் ஆனந்தத்தை எவராலேதான் அளவிட முடியும்? சிறிது காலஞ்செல்ல, செல்வப்புதல்

வர்க்குக் காளைப்பருவமடுத்துவிட்டது கண்டு, தம்மோடொத்த உத்தம க்ஷத்திரிய குலத்துக் கன்னிகையொருத்தியை விவாகஞ்செய்வித்தார். மணமக்களிருவரும் இல்லறத்தைச் செவ்வனே நடத்திவருதலைக்கண்டும் உள்ளம் பூரித்தார். என்றாலும் அவருடம்பு வார்த்திகத்தால் வரவர இளைத்துக்கொண்டே வந்தது. அதையுணர்ந்த மூதுவேந்தர், தமது அருமருந்தன்ன காதலரை அருகிலழைத்துக் கூறுவாரானார்.

குலசேகரா! "எனக்கு வார்த்திகம்" என்னும் பருவம் பூர்த்திபெற்று விட்டதால், நரைதிரை யென்னும்போர்வையால் உடலம் மூடப்பட்டது. எலும்பு நரம்புகளும் வெளிப்படத்தோன்றலாயின. நடுவிடம் விற்போல் வளைந்தது. நடையிழந்தனகால்கள். படையிழந்தனகைகள். இந்திரியங்களோ தத்தம்நிலைமையிற்குன்றி அறிவிழந்தன. இப்படியிருக்க, எப்படியான்இவ்வுலக பாரத்தைத் தாங்கித்தரிப்பேன். எனது ஆருயிர்க் காதலா! இனியிந்த இராஜாங்கப் பொறுப்பு, உன்னையே சார்ந்ததாகும். கடமைபட்டவனும் நீயேயாவாய் என்றுரைத்து வேண்டும் புத்திமதிகளும் பலஅருளி, மண்டலீகரும் மந்திரிமார்களும் குடிஜனங்களும் கூடியிருந்தமஹாசபையில் நல்ல சுபமுகூர்த்தத்தில் இந்தக் குலசேகரரை இரத்

தின சிம்மாசனத்தில்ஏற்றி, பரம்பரையாய் வந்துள்ள தமது செம்பொற் கிரீடத்தையுஞ் செங்கோலையும், ஆசியுடனளித்து, இவரை இராஜசேகரராக்கி, சத்கதியை விரும்பித் தபோவனஞ் சார்ந்தார்.

இப்படித் தமது பிதாவினுல் தலைமேலேற்றப்பட்ட ராஜ்யபாரத்தைக்குலசேகரர் வெகு ஆதரவுடன் தாங்கி அரசு செலுத்துவதானுர். இவருடைய ஆளுகையில் அதிவிர்ஷ்டி, அநாவிர்ஷ்டி, தொத்துநோய், பஞ்சம், அகாலமரணம் முதலியன நிகழ்ந்ததேயில்லை. இவர் ஒரு காலத்தில் அளவிறந்த படைக்கடல்களுடன், திக்விஜயம் செய்யப்புறப்பட்டு சோழபாண்டியர்களையும் வடநாட்டுக் காவலர்களையும் தமதடிப்படுத்தி, உலகமெல்லாம் பொதுநீக்கி ஜயஸ்தம்பம் நாட்டி, ஒப்பற்ற ஓர் சக்ரவர்த்தியாக விளங்கினர். இதனுலேயே இவர் தம்மை "கொற்ற வேற்றுனைக் குலசேகரன்" என்றும் "கொல்லிகாவலன் கூடல் நாயகன் கோழிக்கோன் குலசேகரன்" எனவும் கூறியிருக்கின்றுர். இங்ஙனம் இவர் உலகத்துக்கெல்லாம் ஒரே சூரியனைப்போல் விளங்கி, செங்கோலென்னுஞ் செவ்விய கிரணத்தைப் பகையரசென்னுமிருள் நீங்க, எல்லாவிடத்தும் செலுத்தலினுல் பிரஜை

கள் என்னுந் தாமரை புஷ்பங்கள் முகமலர்ந்த களிப்புடன் இன்புறுவனவாயின. இக்காலத்தில் ஓர் ஆண் சந்ததியும் இவர்க்குண்டாயிற்று,

இங்ஙனம் வருடங்கள் பலசெல்ல, இந்த சார்வபௌமராகிய குலசேகர மன்னர்க்கு, அனந்தங்கோடி ஜன்மங்களிற் செய்துவந்த நற்புண்ணியப் பயன்கள் யாவும்ஒன்றுசேர்ந்து, இக்காலத்தில் பக்குவப்பட்டு விட்டதின் பயனால் உத்தமமான ஓர் எண்ணம் உண்டாயது.

"நாம் இக்காலம் வரை நாடோறும்உண்டதேயுண்டு உடுத்ததேயுடுத்து, செய்ததே செய்து, உறங்கிவிழித்து, உலகத்தில் வாழ்ந்து வருகின்றோம். இப்படி வாழ்க்கை பெறுவதில் இடையிடை இடியிடித்தது போல் எத்தனையோ விதமான வியாகுலங்கள் உள்ளத்துக்கும் உடலுக்கும் வந்து வருத்திக்கொண்டேயிருக்கின்றன. இங்ஙனம்வருத்தப்படாதகாலமொன்றிருந்ததாகவும் நமக்குத்தோன்றவில்லை. இப்படி எப்பொழுதும் துன்பத்தால் வெம்புதலே நம்முடைய வாழ்க்கை நாளின் போக்காய் விட்டது. முழுமூடத்தனத்துக்கு முதற்பாதமான இளமைப்பருவம், நம்மைக் காளைப்பருவத்தின் கடைவாயிலிற் கொண்டு போய் விட்டது. அப்பால் கனத்த பாவங்களுக்

கெல்லாங் காரணமான இந்தக் காளைப் பருவமும் மூதுமைப் பருவத்தின் முனையிற் கொண்டுபோய் முட்டி யிருக்கிறது. அருவருக்கத்தக்க இந்த வார்த்திகம் இனி மரணத்திலும் இம்மரணம் பிறப்பிலுங் கொண்டுபோய்விடுமென்பதற்கு ஆக்ஷேபமேயில்லை. இப்படிப் பிறத்தல் இறத்தல் என்னும் சுழற்காற்றிற் சுழன்று சுழன்று நாமடைந்துகொண்ட துன்பங்களுக்கோரளவேது, சங்கையேது?

இக்கொடிய துன்பந்தான், எவ்வாறு வந்தது என்பதைப்பற்றி யோஜிப்போமானால், இது முன்செய்த வினைகளால் வந்ததென நூல்கள் கூறுகின்றன. இவ்வினைகளைப் போக்க வழி யாதுளதென நோக்கும்பொழுது, உண்மைக் கடவுளை அறிந்து வழிபடுதலாகிய மார்க்க மொன்றன்றி வேறு எவ்வழியுமில்லை என வேதங்கள் ஒருதலையாய்ப் புகழ்கின்றன. இவ்வுண்மைக் கடவுள்தான் எவராவர் என விசாரிக்குங் காலத்தில், ஒவ்வொரு மதஸ்தர்களும் தாங்கள் தாங்கள் குறிக்கொண்டு வழிபடுங் கடவுளே உண்மையும் முதன்மையுமான தெய்வமாகும் எனக் கூறி நிலைபெற வாதிக்கின்றனர். சமுத்திரத்திலுள்ள மணலை அளவிட்டாலும் அளவிடலாம்; தராதலத்திலுள்ள சமயகோடிகளை அளவிடுதல்

எவராலு முடியாதவாருயிருக்கிறது. இங்ஙன மிருப்பஅற்ப அறிவுடைய யாம் எங்ஙனம்எக் கடவுளைத்துணிவோம். எவ்வாறு வழிபட்டுய் வோம்" எங்குமுளதாய் எல்லாவற்றுக்குங் காரண மானதாய்,ஈடேற்றவல்ல கருணைப் பெருக்குடைய தாயுள்ள தெய்வமிது" வென உள்ளங்கை நெல் லிக்கனிபோற் காட்டி அதனை வழிபடுதற்குரிய நெறியையும் உபதேசித்து, என்னை நல்வழிப் படுத்தும் ஓர் ஆசிரியரை ஏழையாகிய யான் இந்த ஜன்மத்தில் எங்கேனுந் தெரிசிக்கப் பெறு வேனோ?" என்பதுதான்.

இவ்விதங் குலசேகரர் "உலகத்துக்கொரு காவலராய்க் கனகசிம்மாசனத்தின் மேல், கொலு வீற்றிருக்கும்வாழ்க்கையைக்கழுவின்மேலிருக்கும் உயிர்வாழ்கையாகும்" எனக்கருதி ஒவ்வொரு நாளையும் ஒவ்வோர் யுகம்போற் கழித்து வருவா ராயினர். கானலை நீரென்று நினைத்துக்கடுவழி அலைந்து காலோய்ந்து சாகும் மிருகங்களைப் போலாகாமல், உயிரொடுகூடிய உடம்பிருக்கும் பொழுதே பிறப்பென்னும் பெருநோயைத் தீர்க்கும் அருமருந்தொன்றை நமக்கு எந்த மஹா வைத்தியர் அருள்செய்யப் போகின்றாரோ? அந்த ஆசிரியர் எப்படிப்பட்டவராயிருப்பாரோ? எந்த வருணத்தவரோ? என்று சதா ஒரு இறை

வரை எதிர்பார்த்த வண்ணமாகவேயிருந்தார். ஆதலின் இவர் எங்கேனும் ஒரு சிறிது வைதிகானுஷ்டான முள்ளவரைக் கண்டுவிட்டாற் போதும், உடனே அவரைச் சாஷ்டாங்க தண்டஞ்சமர்ப்பித்துப் பூஜித்து "ஐயா பெரியோரே! இவ்வடியேனிடத்திற்கிருபைகூர்ந்து, இப்பவசாகரத்தைக் கடக்குமொருநெறி கூறியருளவேண்டும்" எனப்பிரார்த்திப்பார். அதற்கவர்களுந் தாங்கள் கண்ட, அல்லது கேள்விப்பட்ட, மார்க்கத்தை விரித்துரைப்பார்கள். இப்படிப்பலவேறு சமயத்தவருடைய கொள்கைகளையெல்லாம் பலவழியாலுங் கேட்டறிந்து பார்த்தார். ஒன்றும் இவர் மனதிற்குப் பொருந்தியதாயில்லை. இவ்வாறு ஆண்டுகளுஞ் சில சென்றுவிட்டன. விடவே, வேந்தர் இனிநமக்கு ஏற்ற மார்க்க மொன்றைப் போதிக்கும் ஆசிரியர் ஒருவரைக்காண்பது அருமையே யாகும் என மனஞ் சோர்ந்து, மயக்கமடைந்தவர்போல் ஒரு காரியத்திலுஞ் சிந்தையைச் செலுத்தாதவராய் வடதிருவேங்கிடம்வரை யாத்திரை செய்து மீண்டும் தந்நாடடைந்தனர்.

மழைத்துளியை எதிர் நோக்கி அண்ணாந்திருக்கும் ஜாதகபக்ஷியைப்போல், ஞானதேசிகரொருவர் வருகையை எதிர் பார்த்திருந்த இவ்

வஞ்சிவேந்தர்முன், ஒருநாள் அவர் ஜென்மாந்திரங்களிற்செய்துவந்தபுண்ணியங்களின் பயனே போல்வேதியர் ஒருவர் தோன்றினர். அவர்கங்கையாடிப் பலதலங்களையும் சேவித்துப் பூவலஞ் செய்துகொண்டிருக்குமோர் புனிதர். இப்படிப் பட்டவரைக்காவலர் கண்டதும், எதிர் வந்தனோபசாரத்துடன் அரண்மனைக்குள் அழைத்துச் சென்று ஆசனமளித்து, அர்க்கியபாத்தியங்களாற் பூசித்துமுகமன கூறி, போஜனமளித்து, அந்தரங்கமான ஓரிடத்தில் அவரை அழைத்துச்சென்று வினவலானர்.

இம்மையோடு மறுமைப்பயனையும், இனிதளிக்க, இவ்வேழைமுன் வலிய எழுந்தருளிய மஹாத்மாவே! அடியேன் கேட்கும் வினக்கட்கு விடையருளி உய்விக்கவேண்டுகிறேன் என்று வணங்கினர். வேதியரும் "விளம்புக" என, வேந்தர் சுவாமி! உலகம் அநித்தியமே என்பதையும் எல்லாம் மாயாவிகாரமாவதையும், பெரியோர்பலராலுங் கேட்டறிந்துளேன். ஆனல் இவைகளைத்தள்ளி எல்லாவற்றுக்குமுதற் காரண மாயுள்ள தெய்வமின்னதென்பதும், அதனை அடைதற்குரிய நெறி இஃதென்பதுந் தான் எளியேனுக்கினிது அருள வேண்டுவன. இவ்விஷயமாய் எத்துணையோ சமயத்தினர்

எவ்வளவோ விதமாகக் கூறிப்போந்தனர். அவை யெல்லாம் இச்சிறியேன் உள்ளத்துக்குச் சிறிதும் பொருந்தியனவாயிருக்கவில்லை, என்றூர்;

அது கேட்ட ஆசிரியர் பேசுவார்:—அரசே! உம்மால் கேட்கப்பட்ட வினுக்களிரண்டும் சாமானியமானவையல்ல; இவ்வினுக்களைக் கேட்டறிய இக்காலத்தில் விருப்பமுள்ளவர்களே மிகச்சிலராவர்; மனிதராய்ப் பிறந்தவர்கள் அவசியம் அறியத்தக்க ரகசியத்தையே நீர் விரும்பினீர்; ஆதலால் நீர் உபதேசம் பெறும் பக்குவமுள்ளவரே என என் மனந் துணிகின்றபடியால் கூறுகிறேன், கேட்பீராக. அண்டபிண்டசராசரங்களுக்கெல்லாம் ஆதிகாரணமாயிருக்கும் மூலப்பொருள் ஒன்றேயாகும் என்பது எண்ணிறந்தமதசமூகங்களின் துணிபு. அப்பொருளோ ஆதியும் அந்தமும் நடுவுமற்றது என்றும் எக்காலத்தும் எவ்விடத்தும் நீக்கமற நிறைந்துள்ளது. நாமரூபமற்றது மேலும் அது திரிகரணங்களுக்கு மப்பாற்பட்டதாய் விளங்குமொருஜோதியாகும். இப்படிப்பட்ட பராபரத்தைப் பற்பல சமயத்தவரும் பற்பல விதமான பெயர்கள் புனைந்தும் உருவங்களேற்படுத்தியும் தங்கள் தெய்வம் தங்கள் கடவுள் என அபிமானப்பாராட்டியும்பக்தியோடுவந்தனை வழிபாடியற்றியும் வருகின்றனர். இவர்கள்

செய்துவரும் வந்தனை வழிபாடனைத்தும் முடிவில் அந்த ஒரு பரம்பொருளையே சார்கின்றன. அதுவே நினைவார் நினைவின்படி எழுந்தருளி எல்லா நலங்களையும் அளிக்கின்றது. காவலரே! இத்தகைய ஆதிமூலப்பொருளைப் பரிசுத்தவான்கள் சமாதிவீதியில் ஞானக்கண்களால் தெரிசிப்பதல்லாமல், ஊனக்கண் கொண்டுகாண்பது எவராலுமுடியாது. இங்ஙனம் ஞானிக்கு ஒளியாய் அஞ்ஞானிகளுக்கு இருளாய் விளங்கும் அந்த ஏகப்பொருளுக்குப் பெயரொன்றில்லையாயினும், அதன் சந்நிதான விசேஷத்தால் நிகழும் முத்தொழிலின் காரணமாயே, நாமாகச் சில நாமதேயங்களைச் சாத்தியிருக்கின்றனம். அவையாவன, பிரமன், விஷ்ணு, உருத்திரன் முதலாயின. முறையே இம்மூவரும்படைக்குங்கடவுள், காக்கும் பெருமாள், அழிக்கும் மூர்த்தி எனப்படுவார். ஒருவரின் அம்சமே இம்மூவருமாவாராயினும், இவருள்ளுஞ் சிறந்தவரொருவருளர். அவர் யாரோ எனின், நம்மையெல்லாங் காக்குங் கடவுளாகிய திருமாலே. அவரே ஆதியில் தமது நாபீகமலத்தின்வழியாய்ப் பிரமனை உடவி, அவராற் படைக்கப்பட்ட ஜீவராசிகளனைத்தையும் தாய்போற் பரிபாலித்துவருபவர்; ஆதலின், அரசரே! அத்திருமாலையே அடியவர்

அபீஷ்டமெல்லாம் தந்தருளும் முதற் கடவு ளெனக் கொள்வீராக. அன்றியும் பண்டைக் காலத்தில் ஓர் தடாகத்தில் முதலையாற் பிடிக்கப் பட்ட கஜேந்திரன், தன்னைவந்து ரக்ஷிக்கும் பொருட்டுப் பலகடவுளர்க்கும் பொதுவான நாமதேயமாகிய "ஆதிமூலமே" என்று ஓலமிட அதுகேட்டுஅக்காலத்தில்அங்கெழுந் தருளி அக்களிற்றினைக் காப்பாற்றியவர் நம் இலக்குமி நாயகரே அன்றி, வேறிலர். இவ்வரலாற்றாலும் கருணைக்கடவுளாகிய ஒரு கடவுள் இன்னாரெனத் தெளியக்கிடக்கின்றதல்லவா?

"ஸ்ரீ நாராயணமூர்த்தியே ஓர் கடவுளாவர்" என்பதைப் பற்றி விளக்கினேன். இனி அப்பெரு மானைவழிபடும் நெறியையுங்கூறுவேன். ஸ்ரீமா தவப்பிரான் துஷ்டநிக்ரஹ சிஷ்டபரிபாலனத் தின்பொருட்டு இவ்வுலகத்திற் செய்துள்ள அவ தாரங்கள் பலவாகும். ஆயினும், அவைகளுள் அத்தியுத்கிருஷ்டமான அவதாரங்கள்பத்தேயாம் இவையுள்ளுமிகச்சிறந்ததாவது, ஸ்ரீ இராமாவ தாரமே. இந்த இராகவமூர்த்தியை அடைந்து வழிபடும் அடியார்களுக்கருமையாவது எதுவு மில்லை யென்ப தொருதலையேயாம். இக்கடவுள் அடியார்க்கெளியர், அல்லார்க்கு வலியர், ஆபத் பாந்தவர், அநாதரக்ஷகர். குற்றங்களைந்து

குணத்தைக் கொண்டுவக்கும் கொற்றவர் குலத்துச் சிகாமணி! பொறுமையுங்கருணையும் பூத்துப்பொலி வெய்திய அற்புதகற்பகம்! இத்தகைய இராமசந்திரப் பெருமானை மனம் வாக்குக் காயங்களில் பரிசுத்தராய் ஆராதனை புரியுமொருவர் எத்தகைய பதவிகளையும் வெகு அனுயாசமாய் அடையப் பெறுவர் என்பதற்கோர் ஆக்ஷேபமில்லை. இதுசத்தியம், சத்தியம். பிறப்பென்னும் பெருங்காட்டைக்கடக்க நினைவாருக்கு இதுபோலுமோர் குறுக்குநெறிவேறெதுவுமில்லை. நான் இதுவரை கற்றதுங் கேட்டதும் அனுபவித்தில் அறிந்து கொண்டிருப்பதும் இதுவேயாகும். ஆதலால், இன்றுமுதல் நீரும் ஸ்ரீரகுகுலோத்தமராகிய ஸ்ரீராமர் இலக்குமணர் பரதர் சத்துருக்னர் பிராட்டியார் அநுமார் ஆகிய கடவுளரை மாற்றுயர்ந்த சுவர்ண விக்ரகங்களில் எழுந்தருளப்பண்ணி, உமது அலங்கார மாளிகையே அத்தெய்வங்கட்குத் திருக்கோயிலாகச் செய்து, தங்கத்தாலும் நவமணிகளாலும் செய்யப்பட்ட அணிகலங்களால் அலங்கரித்து நித்தியநைமித்யாதி ஆராதனைகளெல்லாம் பூர்த்திபெற ஆசாரியமுகமாக நடந்துவரும்படி செய்வதுமல்லாமல் அப்பெருமானின் திவ்விய சரித்திரமாகிய ஸ்ரீமத்வான்மீகி முனிவரால் இயற்றப்பட்ட ஸ்ரீமத்ராமாயணத்தை

சாஸ்திரங்களில் வல்ல, பாகவதர்கள் படனஞ் செய்யக் கேட்டு மனங்கசிந்து எப்பொழுதும் இராமாமிருத பானமே பண்ணிக்கொண்டிருப்ப தாகிய விரதத்தையே, அனுஷ்டித்துக்கொண்டு வருவீராக. இதுவே என்னாற் செய்யப்படும் உபதேசம், என்றருளினர்.

அந்தணர் சொல்லிய மொழிகளையெல்லாம் அமுததாரைபோல் செவிவழி பானம் பண்ணிக் கொண்டிருந்த அரசர் அந்தக்ஷணமே தமது உள்ளமாகிய திருக்கோயிலுள், அகிலேசனாகிய ஸ்ரீ ராமபிரானைப் பரிவாரங்களுடன் பிரதிஷ்டை செய்து கொண்டுவிட்டாராதலின், உடனே அவர் இரண்டுகண்களையும் மூடிக்கொண்டு, சிறிதுநேரம் தியானத்திலிருந்துவிட்டுப் பிறகு கண்விழித்து, அந்த விப்பிரரது பொற்பாதகமலங்களில் அடி யற்றமரம்போல் விழுந்து தொழுதெழுந்து ஓ மஹாஸ்வாமி! ஆபத்துக்கும் பாபத்துக்கும் இருப்பிடமான அரசாட்சி என்னும் வாழ்க்கை யிற் காலமெல்லாம் போக்கி, அழிநரகங்களுக் கெல்லாம் ஆளாக நிற்கும் இவ்வேழைக்கு, உய் வழி காட்டிச் செய்முறைஉபதேசித்தருளிய தங் கள் கருணைத்திறத்தை என்னென்று சொல்வேன். இனி, தேவரீரே ஞானசாரியார் ஆவதன்றி வே றெவராவர். இப்பொழுதே தங்கள் உத்திரவின் பிரகாரம், சகல திருப்பணிகளையுஞ் செய்து

முடித்து விடுகிறேனென்று அவரிடத்தில் விடை பெற்று, தாம்வசிக்கும் அரசமாளிகையில், அதி யுன்னதமும் அலங்காரமுமான இடத்தையே திருக் கோயிலாக்கிச் சர்வாலங்காரங்கள்செய்வித்தனர். கிளிச்சிறகொத்ததும், மாற்றுயர்ந்ததுமான சுவர் ணத்தால்இராமர் சீதை முதலானவரின் பிம்பங் கள், கைதேர்ந்த சிற்பிகளாற்செய்வித்தனர். நல்ல சுபமுகூர்த்தத்தில் மேற்புகன்ற படிவங்களை ஆசாரியர் முகமாக வெகு கோலாகலத்துடன் பிரதிஷ்டை பண்ணினர். விலைமதிக்கமுடியாத நவரத்தினுபரணங்களாலும் பட்டாடைகளாலும் எழுந்தருளுவித்த மூர்த்திகளை அலங்கரித்தார். அன்றுமுதல் தாம் ஆசாரியராகக் கொண்ட வைணவரையே அர்ச்சகராக்கி நித்தியநைமித் தியாதி விசேடங்களை யெல்லாம், ஏராளமான பொருட்செலவுடன் வெகுவிமர்சையாய் நடத்த லானுர். அன்றியும்அவர் சர்வசாஸ்திரங்களிலும் பரிசயமுள்ளவரும் மெச்சத்தக்க ஆசாரமுள்ள வருமான ஓர்வைணவரைக் குடும்பசகிதம் வர வழைத்து, அவர்க்குவேண்டும் வீடு, மனை, நிலம் முதலான சகல ஐஸ்வரியங்களுங் குறைவறக் கொடுத்து அவரையே ஸ்ரீராமாயணத்தை விரி வுரை விரித்துப் படனஞ்செய்யுமாறு மேற் கொண்டார்.

வஞ்சிகாவலர் நாடோறும் வைகறையில் நித்திரை தெளிந்தெழுந்து, நீராடி நித்திய

கர்மங்களை முடித்து, இராமபிரான் சந்நிதானத்திற் சென்று வணங்கி வெகுநேரம் தியானஞ் செய்துவிட்டுப் பிரசாதமும்பெற்று, சாஸ்திரிகள் செய்யும் இராமாயணப்பிரசங்கத்தை உள்ளமிள்க, உடலம்புளகிப் பச்சிரவணஞ் செய்துகொண்டிருப்பார். இவ்வாறு முற்பொழுது சென்றதின்பிறகு, பிற்பொழுதாகிய மாலைநேரத்துக்கு முன் சிறிது தேசவிசாரணையிலுஞ் சிந்தையைச் செலுத்துவார். சந்தியாகாலம் வந்ததும் நீராடி அனுஷ்டானம் நடத்தி ஸ்ரீ சக்கரவர்த்தி திருக்குமாரர் முன்னிலையிற் சென்று சேவித்து, அப்பெருமானின் அருமைத் திருமேனிகளனைத்தையும் பார்த்துப் பார்த்து, மனங்கலந்தீடுபடுவதனாலாகிய ஆனந்தத்தால், கண்களினின்றும் இன்ப வெள்ளம் பெருகத் தம்மையும் மறந்ததன்மையடைந்திருப்பார்.

நாள்சில இங்ஙனஞ்செல்லுகையில்பலநாடுகளிலுமுள்ள வைணவர்கள் பலரும் இவ்வஞ்சி வேந்தரது, சிறந்த பத்திமையைக்கேட்டு அவரை வந்தடுக்கலாயினர். வந்த பாகவதர் யாவர்க்கும் அக்காவலர் இரவும் பகலும் அதிருசிகரமான போஜனங் கொடுப்பதிற் சிறிதுஞ் சலிக்கவில்லை. அதனால் வைணவக்கூட்டம் நாளுக்கு நாள் அதிகப்பட்டுக்கொண்டே

வந்தது. அவ்வரசர் செய்யும் உபசாரத்தால், வந்தவரெவரும் தங்களூரைக் கனவிலுங்கரு தாமல் அங்கேதானே சுகமாய் வசிக்கலாயினர். அதனால் அந்த வேந்தர்க்குரிய வருவாயிற் பெரும்பாகமும் ஸ்ரீவைதேகிநாயகரின் பூசையிலும், வைணவப் பிராமணரின் ததியாராதனத் தினுமாகச் செலவிட நேர்ந்தது.

இவ்விதம் குலசேகரர் பொழுதிற்பெரும் பாகத்தைக் கடவுளர் சேவையிலும், பணத்திற் பெரும்பாகத்கைப் பிராமண சந்தர்ப்பணையிலு மாகச் செலவிட்டுவருவதுமல்லாமல், வந்து கூடும் வைணவர்கள் சொற்படி கேட்டு அவர் தூண்டியபடி நடந்து, அவர்க்கடிமையாளராய்ப் போய்விட்டதையுங்கண்டு மனம் பொருத மந்திரிகள் ஒருநாள்வேந்தரை அடுத்துவணங்கி, சுவாமி! "ஊணுறக்கமின்றி இரவும் பகலும் உழைத்தாலும். உண்மை நிலைகாண்டல் அரிதா யிருக்கின்றது, என்றவிஷயந்தாங்கள் அறி யாததல்ல. இப்படியிருக்கத் தேவரீர் உலகபரி பாலனத்தை அநாதரவு செய்வதுநியாயமாகுமா? பாவத்துக்கிடமாவதன்றோ? இங்ஙனம் அர சாள்கையைப் பராமுகஞ் செய்திருத்தலைத் தெரிந்தால் முன் நமக்குத் தோற்று வனாந்தரங் களிற்றிரிந்துகொண்டிருக்கும், பகையரசர்கள்

சிதறுண்ட தமது சைனியங்களையெல்லாஞ் சேக ரஞ்செய்துகொண்டு போர்செய்யத் தொடங்கு வார்களே. அப்படித்தொடங்கினால் அவர்களை எதிர்த்து அப்பாலோட்டிவிட ஏராளமான பண மும் படைப்பெருக்கமும் வேண்டிவருமே; இவையெல்லாந்திருவுளத்தில் எட்டி யோசனை பண்ணாமல் இப்படியிருத்தல் நலமாவதோ?" என, காவலர் புன்னகை கொண்டு அவரை நோக்கி, மதிவல்லீர்! பொழுதையும் பொருளையும் வீணாக்குகின்றேன், என்றீர்கள் இஃதென்ன, அறி யாமையேயன்றி வேறில்லை. நான் அவை யிரண்டையும் சன்மார்க்கத்திலேயே செலவு செய்துகொண்டுவருகின்றேன்; என்பதை நீங்கள் அறிந்திருந்தும், அறியாதவர்போலிருத்தல் ஆச்சரியமே. நாம் சுவாமி காரியத்தை நங் காரியம்போற் பார்த்தால் சுவாமி நம்முடைய காரியங்களைத் தங்காரியம்போற் பார்ப்பார் என்னும் பெரியோர் வாக்கியத்தை மறந்து விட்டீர்போலும். நிற்க எவ்வளவு போற்றிப்புரந் தாலும் கெடுகாலமடுத்திருக்குமானால் அவை யிரண்டும் அநியாயநெறியிலேயே தொலைந் தொழியும். நற்காலமடுக்குமாயின் நன்னெறி யிலேயே அவையுபயோகப்பட்டு, நலந்தருவன வாம். இவையெல்லாங் கருமத்தின்வழி வருவ தன்றி வேறில்லை. அமாத்தியரே! இதற்குமுன்

நாம் மேற்கொண்டொழுகிவந்த, இராஜரீக வாழ்க்கையானது, ஊருக்கு வேண்டிப் பால் சாப்பிட்டு வந்ததையும், இப்பொழுது கொண்டிருக்கும்வாழ்க்கை உடம்புக்கு வேண்டிப் பால் பருகுதலேயும் ஒத்திருக்கின்றது என்றறிவீராக. இப்பொழுதுதான் நான் மனிதனுகப் பிறந்ததின் பயனை அனுபவிக்கிறேன். இப்பொழுதுதான் நான் என் சொந்தக்காரியத்தில் தலேயிட்டிருக்கிறேன், எனது வாழ்க்கை நாள் முழுமையும் இப்படியே செலவிடத்துணிந்தும் விட்டேன். ஆதலால் எனது அருமை அமைச்சர்காள்! நான் இப்பொழுது கொண்டிருக்கும் விரதத்துக்கு யாதொருபங்கமும் வாராமற் காப்பது, உங்கள் கடமையேயாகும். அதிமேதாவிகளான உங்களே மந்திரியராகப் பெற்ற எனக்கு இராஜ்யாதிகார விஷயமாய் யாதொரு குறையும்வரமாட்டாதென்பது உறுதியேயாம். முன்போலவே சகலவிஷயங்களேயும் நன்கு கவனித்து, எனக்கும் உமக்கும் புகழும் புண்ணியமும் சித்திக்குமாறு, இராஜாங்க காரியத்தை நடத்தி வருவீராக" என்றருளி, அப்பாற் சென்றனர். அன்று முதல் மந்திரிகளே பொறுப்பாய் நின்று சகல விஷயங்களேயுங் கவனித்து வருவதானர். அப்பொழுது

அந்த இராஜ்யமானது அடிமரம் இற்றுப் போக விழுதுகளால் நிலைபெற்று நிற்கும் ஆலமரத்தை யொத்திருந்தது.

---

## இரண்டாம் பாகம்

இராஜரீகம் என்னும் பாரச்சுமையைக் கலா வல்லவர் தலைமேற் பொறுக்கவைத்த நாள்முதற் கொண்டு, வஞ்சிவேந்தர் முன்னிலும் இரட்டிப் பான பக்தியோடும் பணச்செலவோடும் பகவத் கைங்கரியங்களை வெகுசப்பிரமமாக நடத்தலா னார். பாகவதர் கூட்டங்களும் முன்னிலும் அதி கப்பட்டுக் கொண்டே வந்தன. அதிகப்பட அதி கப்பட அவரை உபசரித்தலாகிய அன்பும் அர சர்க்கு அபரிமிதமாகப் பெருகிக்கொண்டிருந்தது. இப்படியாக அந்தமாலடியார்பலரும். அந்த இராஜகிருகத்தில் அந்தப்புரந்தவிர, மற்றஎந்தப் புரத்திலும் தடையின்றித் தங்களிஷ்டம் போற் சஞ்சரித்துவேண்டுங்காரியங்களைச் செவ்வனே நடத்திவருவராயினர்.

இப்படியிருக்கையில், ஒருநாள் காவலர் வழக் கம்போல் ஸ்ரீராமபிரான் சந்நிதியில் திருமாலடி யார் திருக்கூட்டத்தின் நடுவிலிருந்து, மனமிளக

ஆனந்தக் கண்ணீர் ததும்ப ஸ்ரீ இராமாயண சிரவணஞ் செய்துகொண்டிருந்தார். அன்றுகொடிய கண்டகரும் முரடருமான கரதூடண திரிசிரசரின் யுத்தகட்டமாயிருந்தது. சாஸ்திரிகள் இப்பாகத்தை, விஸ்தாரமாகப் பொருள்விளக்குகையில், அவர் கரன் முதலானவர்களோ இரக்கமற்ற படுபாவிகள்; மஹாபாவிஷ்டர்கள். இவர்களுக்குத் துணையாய்வரும்படைகளோ இருட்டுக்கூட்டத்தையொத்தபதினான்காயிரமரக்கர்கள். இவர்களையெதிர்த்துப்போர்செய்ய நின்ற இராகவரோ ஒருத்தர்; வில்லன்றிவேறு துணையும் அவர்க்கு அங்கில்லை; இளையபெருமாளாகிய இலக்குமணரோ பிராட்டியாரைக்காத்து மற்றோரிடத்திலிருந்து விட்டார்; இந்த யுத்தம் எப்படியாகுமோ? என்னெஞ்ச மஞ்சுகின்றது என வான்மீகி முனிவர் கூறுகின்றாரென, சோகரசம் ததும்ப வெகு கனிவாய்ப் பிரசங்கஞ் செய்துகொண்டு போகையில், குலசேகரர் தமது உள்ள மெல்லாம் இராமகதை வெள்ளமாகவே மாறிவிடத் தம்மையே மறந்த தன்மையை அடைந்தவராயிருந்தனர். ஆதலால் அவர் திடீரென அச்சபையினின்றெழுந்து, அடுத்திருக்கும் அரிக்காரரை நோக்கி, "ஜனஸ்தானத்தில் துஷ்டரும் பலருமான கரனாதி இராக்கதருடன் விற்றுணையன்றி மற்றொரு துணையுமில்லாமல், எம்பிரான்

ஒருவராகவே நின்று போர்புரிந்தனர் என்பதைக் கேட்டும் நானிங்கிருத்தல் அழகல்ல. இப் பொழுதே அங்கு சென்று அவர்க்குப் படைத் துணையாக வேண்டும். க்ஷத்திரிய தர்மமு மிதுவே யாகும்; ஆதலால் இக்கணமே நீர் நமது சேனுதிபதியரை நால்வகைப் படை களுடன் ஜன ஸ்தானம் நோக்கி விரைந்து செல்லுமாறு கூறுவீராக; நமது இரதமும் அலங்கரிக்கப்பட்டு ஆசார வாசலுக்கு வரட் டும். நாமும் போர்க் கோலங் கொண்டு இதோ புறப்பட்டு விட்டோம்,” என்று ஆஞ்ஞாபித்த லும், அவர்களும் அவ்வாறே செய்யச் சேனைக ளெல்லாம் ஆயுதங்களுடன் ஜனஸ் தானத்தை நோக்கி நடக்கலாயின. வேந்தரும் போர்க் கோலத்துடன் வாயிலை நோக்கிச் செல்லத் தொடங்கினர். பக்கத்திலுள்ளவர்கள் யாவரும் திக்பிரமைகொண்டு ஒன்றும் பேசாமல் நின்றுவிட்டனர். இதுகண்ட மந்திரி ஒருவன், அரச னிவ்வாறுனதற்குக் காரணம், அவர் கொண்டிருக்கும் இராம பக்தியின் முதிர்ச்சியே யாகும் எனத் துணிந்து, புராண சாஸ்திரிகளை அருகிலழைத்து, வேறென்றுஞ் சொல்லாமல் “நீர் இப்பொழுதே காவலரை விரைந்தணுகி இராமர் கரனுதியரைச்சங்கரித்து வெற்றிமாலை சூடின பாகத்தைச் சொல்லும். போம், போம்.”

எனலும் அவரும் அப்படியே செய்தார். உடனே தாரபதியும்தாமேவாகைசூடிஜயசீலராய்த்திரும்பு வதுபோல் மீண்டு, ஸ்ரீ இ ரா ம சு வா மியை வணங்கி, சுவாமி! சர்வவல்லமையும் பொருந்திய உமக்கும் ஒருவருடைய சகாயம் வேண்டுவதோ? சபல புத்தியால் ஏ தோ படைத்துணையாக, இவ்வெளியேன் புறப்பட்டேன். ம ன் னி த் து அடியனைக் காப்பாற்ற வேண்டுகிறேன்" எனப் ப ற் ப ல வா று புகன்று போற்றினதுமன்றி, அன்று விடாயாற்ருக அ நே க வி த மா ன நைவேத்யாதி உபசாரங்களும் வெகு கோலாகல மாக நடத்தினர்.

இரவாயிற்று, ஆனதும் மந்திரிகள் "நம் காவலர்கொண்டிருக்கும் ப க் தி ப் பெ ருக்கம் அ வ ரை ப் பயித்தியத்திற் கொண்டுபோய்ச் சேர்த்துவிட்டது. இனி எவ்வாறெல்லாம்நடக்க விருக்கிறதோ தெரியவில்லை. இதற்குக்காரண மாவார் பலராயினும் முக்கியமானவர் புராணி கரே. அ வ ரை நா ம் வெறுத்தாலும் அரச ருக்குக் கோபமுண்டாகும். விரும்பிப்போற்று தலுஞ்சரியல்ல. தற்கால நிலைமையில் அவரைத் திருத்துதலே உ சி த மா கக் காண்கிறதுஎனத் துணிந்தவராய் அவரை யோர் ஒதுக்கிடத்துக் கழைத்துப்போய், பு ரா ணி க ரே! நாளைத்தின

முதல் புராண படனஞ்செய்து பொருள்விரிக் கையில் இராமராலும், அவர் அநுஜராலும், மற்றுமுள்ள வானரர்களாலும் யுத்தமத்தியில் எங்கேனும் அடிபட்டார் இடிபட்டார் கட்டுப் பட்டார் சோர்வுபட்டார் சோகப்பட்டார், என்று வரும் பாகங்களை யெல்லாம் அதிகமாய் விஸ்தரியாமல், நம் அரசர் மனம் துக்கத்தை யேனும் கோபத்தையேனும் அடையாமலிருக் கும் வண்ணம் வெகு சங்கிரகமும் சம்பிரதாயமு மாகப் பிரசங்கஞ் செய்தல் வேண்டும். மற்றும் அவர்கள் ஜெயம் பெற்றார் களிப்புற்றார் என்று வருங் கட்டங்களையெல்லாம் வெகு கம்பீரமாகச் சங்கீதத்துடன் தம் சாமர்த்தியமெல்லா மங்குக் காட்டிக்கொள்ளும். இம்முறைக்குச் சிறிதும் மாறுபடக்கூடாது. படுவீரேல் அது எல்லோர்க் கும் ஆபத்தாய் முடியும், ஜாக்கிரதை, போய் வருக" எனலும், அவரும் அவ்வண்ணமே நடப்பேன், சிறிதுந் தவறேன் என்றுசொல்லித் தம்மிடஞ்சார்ந்தார்.

மறுதினமுதல் சாஸ்திரிகள் அமாத்தியர் தம்மிடங் கூறியபிரகாரமே கதையை வெகு ஜாக்கிரதையுடன் மேல்நடத்திவந்தார். மாதங் கள் பலசென்றன. ஒருநாள் புராணிகர் ஏதோ நோய்கண்டு எழுந்திருக்கக்கூட முடியாதவரா

யிருந்தபடியால், அவர் தம்மிலும் விசேஷ சாஸ்திரப்பரிசய முள்ளவரும் மதுரவாசாலகரு மான, தமது குமாரரைப் பக்கத்திலழைத்து, “நான் இன்று வெளிச்செல்ல முடியாதவனு யிருக்கிறபடியால் நீ இப்பொழுதே ராஜசபைக் குப்போய் என்னுடைய ஸ்தானத்திலிருந்து, இவர் நம்முடைய சாஸ்திரிகள் குமாரரா? இப்படிப்பட்ட மகாவித்வானைப் பிள்ளையாக அடைந்துகொள்ள, அவர் எப்படிப்பட்ட தவங்களைச் செய்தாரோ? என்று அரசரும் அவையோரும் மெச்சும்படி இனிமையான சங் கீதத்துடன் விசேஷமான பொருள்களையெல் லாம் எடுத்தெடுத்து, வெகு விஸ்தாரமாக விளக்கிப் பிரசங்கிப்பாயாக” எனலும், பிள்ளை யாண்டார் அப்படியே செய்கிறேனென்று, பிதாவை வணங்கி, அவரது ஆசிர்வாதமும் பெற்று இராஜசபை சார்ந்து தமது பிதா ஸ்தா னத்திலிருந்து படனஞ்செய்யத் தொடங்கினர்.

அன்று, சக்கரவர்த்தி திருக்குமாரர்களுக்கும் இந்திரசித்துக்கும் யுத்தம் நடக்கும் கட்டமா யிருந்தது. குட்டிப் புராணிகர் மட்டற்ற களிப் புடன், இந்திரசித்து பெரும் படைக்கடலுடன் இரணகளத்தில் இராம இலக்குமணருடன் எதிர்த்துப் போராடினதையும், அப்பால்

அவன் அவர்முன் நிற்கமாட்டாதவனுய் மாயை யில் மறைந்துநின்று, தான் வரத்தாற்பெற்ற பிரமாஸ்திரத்தைப் பிரயோகித்து, இரகு வீரரோடு தம்பியரையும் மற்றுமுள்ள குரங்கினங் களையும், குண்டுருட்டாகக் கட்டி யுருட்டினது மல்லாமல், ஒவ்வொருவரையும், மயிர்முனைக் கோர் அம்புவீதம் எய்து துளைத்துச் சடல மெல்லாஞ் சல்லடைக் கண்ணுக்கியதையும், அத ஞல் வானரவீரர்களில் பலர் இறந்து பட்டதை யும், இராமஇலக்குமணருக்குங்கூட உயிர் இருக் கிறதோ இல்லையோ என்னும்படி அவ்வளவு மயங்கி மூர்ச்சைபோய்விட்டனர் என்பதையும், அதுகண்ட தேவர்கள் சோகக்கடலில் மூழ்கி விட்டனர் என்ற செய்தியையும், வரிசை வரிசை யாக எடுத்துச் சோகரஸமென்னுஞ் சோணுமாரி பொழிந்துகொண்டே போகலானுர். இவை யெல்லாங் கேட்டுக் கண்ணீர்விட்டுக்கதறி அழாத வர்கள் அங்கொருவருமே இல்லையென்ருல், அக்காலத்தில் நம் குலசேகரர் திருவுள்ளம் இன்னபாடு பட்டிருக்கும் என்பதை எவ ராலேதான் சொல்லமுடியும். அவர் சர்வலோக சரண்யனுகிய ஸ்ரீ ராமபிரானுக்கும் இத்தகைய கஷ்டம் வந்ததே, என்ற துக்கத்தின் பெருக் காலும் நம் நாயகனை ஓர் அற்ப அரக்கப்பயல் இவ்வாறு செய்வதா என அவன்பேரில் மூண்டு

விட்ட கோபத்தின் கொடுமையாலும், கண்களி லிருந்து நீரும் நெருப்பும் பொங்கிப் பொழி கின்றவராய், வீராவேசத்துடன் எழுந்திருந்து பக்கத்தினின்ற சேவகரைநோக்கி, "நாம் இப் பொழுதே இலங்கை சென்று, பாவியும் அதர்ம யுத்தஞ் செய்பவனுமான அந்த இந்திரசித்தன் தலையை, அந்தரத்தில் துள்ளி விழும்படி பொருது, நமது கொற்றவர் குரிசிலாகிய இராக வற்கு வெற்றிமாலை புனைவிக்க இதோபுறபட்டு விட்டோம், நமது சேனைகளெல்லாம் நமக்கு முன்னேயே அங்குச் செல்லக்கடவது என்று உத்திரவிட்டு" * போர்க்குரிய அணிகளையும் படைகளையுமணியலாயினர். சேனைத்தலைவரும் தத்தம் படைகளுடன் வெளிப்பட்டனர், சமர முரசங்களு முழங்கலாயின. அண்டையிலுள்ளவர் யாவரும், அரசரது நிலைமைகண்டு நடுநடுங்கி ஆங்காங் கொதுங்கலாயினர். இது தெரிந்த அமைச்சர்கள் மன்னவர்க்குச் சித்தப்பிரமை சென்னியேறி விட்டதெனவும், இந்நோயைப் போக்கும் விதத்தைப்பற்றி வெகு சீக்கிரம் ஆலோசனை செய்யவேண்டும்எனவும் துணிந்து

---

*"இராவணன் சீதையை எடுத்துச்சென்றான் என்ற இடத்தும் அரசர் இலங்கையை நோக்கிப் போர்க்கோலங் கொண்டு புறப்பட்டனர். எனவும் கூறுவர்."

தற்கால சாந்தியாக ○ அந்தக் குட்டிப்புராணிகளைக் கிட்டத்திலழைத்து, வேந்தர் அரண்மனை விட்டு வெளிப்படுமுன் பரிவாரங்களுடன் இராமபிரான் பிரமாஸ்திரத்தினின்றும்விடுபட்டதாகக்கூறும் பாகத்தைப் படியும் என, அவரும் அவ்வாறே காவலரை அணுகி, அநுமான் சஞ்சீவிபர்வதத்தைக் கொணர்ந்ததும், அதனல் சகலரும் உயிர்பெற்றெழுந்து ஆரோக்யமடைந்து, அந்தஇராவணன்மகனை இரணகளத்திராவணம் அடித்தோட்டியதுமான கதைகளை விரித்தனர். இவையெல்லாங்கேட்ட குலசேகரர், வெகு குதுகலங்கொண்டவராய் ஸ்ரீ அபிராமப்பிரானதுபராக்ரமத்தைச் சிலாகித்துக் கொண்டே திரும்பி அவரது சந்நிதிவந்து வணங்கி நின்றனர்.

புரவலர் இவ்வாருய் விட்டதைக் குறித்து அமைச்சர்கள்யாவரும் வெகுரகசியமாய்ஓரிடத்திலிருந்து, ஆலோசிக்கலாயினர். அவருள் ஒருவர் மற்றையவர்களை நோக்கி "நண்பர்காள்! நம்மிறைவர் இயற்கையில் அதிபுத்திசாலி; சகல

○ இந்த இடத்தில் "சேனைகள் இலங்கைநோக்கிச்செல்லுவதுபோலப் பாவனைசெய்து மீண்டு, வெற்றிபெற்றுவந்ததாக அரசருக்குக் கூறினர்" என்பாருமுண்டு. இதன்றி வேறு கட்டத்தில் இவ்வாறே வேறுவிதமான நிகழ்ச்சியுங் கூறுவர்.

சாஸ்திரங்களிலுந்தேர்ச்சிபெற்றவர். இராஜரீகத்தில் இரண்டாவது மனு என்றே சொல்லுந்தரத்தவர். மன்னுயிரைத் தம்முயிராகமதித்து உலகமெல்லாம் உள்ளங்கையிலேந்தி ஆவலோடு புரந்துவந்தவர். இப்படிப்பட்ட மஹாத்மாவை மருந்தாலோ மந்திரத்தாலோ வேறெந்தமார்க்கத்தாலோ அறிவைமயக்கிப் பித்தேற்றிப் புலம்பும்படியும் பயித்தியக்காரனைப்போல் நடக்கும்படியும் செய்து விட்டனர்; இக்கொடிய வைணவர்கள் இம்மட்டோ, இவர்கள் நம்மிறைவரை நினைத்தபடியெல்லாம் ஆட்டுவித்து, பொருள்பரிக்கவுஞ் செய்கின்றார்கள். இவர் சேர்க்கையாலேயே நங்காவலர் இப்படிக்கேவலப்பட்டுவிட்டார் என்பதற்கு யாதொரு சந்தேகமுமில்லை. ஆதலால் இனி யிந்த மாலடியாரை நம்நாட்டிற் காலடிவைக்கா வண்ணம், அப்பால்ஓட்டி விடச்சூழ்ச்சிசெய்வதே நமது முதற்கடமையாகும்''என மற்றவரும் சம்மதித்தனர். விப்பிரரை அப்புறப்படுத்தும் வழியாதென்று ஒருவர் கேட்க, மற்றொருவர்“ அது என்ன! ஒரு பெரியகாரியமா? வெகு சீக்கிரம் வெளிப்படுத்திவிடலாம்; எவ்வாறெனில் ஸ்ரீராம விக்ரகத்துக்கு அணிந்திருக்கும் பணிகளில் இரண்டொன்றை நாயேபிறரறியாது கவர்ந்து ஒளித்து வைத்து அப்பழியைப் பூசாரிமுதலானவர் தலையில் ஏற்றிவிடுவதுபோதும். உடனே

புரவலர்க்கு அவர்மேல் அருவருப்புண்டாய்விடும். விடவே நாமவரைத் தண்டித்துப் போக்கிவிட லாகும்" எனலும், எல்லோரும் இதுவே நல்ல தந்திரம் என்று மனமொப்பி, நடுராத்திரியில் கோயிற்கதவுகளைக் கருவியால் திறந்து, ஸ்ரீஇராம விக்ரகத்தின் திருப்புயத்திலுள்ள சில விலையேறப் பெற்றநகைகளைக் கழற்றியெடுத்து ஓரிடத்து மறைத்து, மீண்டுங்கபாடபந்தனஞ் செய்து தம்மிடஞ்சார்ந்தனர்.

அடுத்த நாள், அருணோதயமாகையில் வழக்கப்படி அர்ச்சகர் நீராடிகடமைமுடித்துப்பூஜாகிருகத்திற் பிரவேசித்து, கர்ப்பக்ருகத்தின் கதவைத் திறந்தார். திறந்ததும் இராமவிக்ரகத்தின் திருமேனி வெளியாயிருப்பதைக் கண்டார்! உற்று நோக்கினர். திருவாபரணங்களிற் சிலகாணவில்லை. உடனே அவர் திடுக்கிட்டு நடுநடுங்கி, அங்கிருந்து ஒரே ஓட்டமாயோடி அரசரிடத்தில் நாக்குளற நவின்றார். நவின்றதும் நராதிபர்விரைந்துவந்து ஸ்ரீராகவபிரான் படிவத்தை நன்கு நோக்கினர், பணிகள் பறிபோயினதைத் தெரிந்தார். துக்காக்கிராந்தராய் "ஹாஹா! என்ன அநியாயம், நமது காகுத்தப்பெருமானின் அணிகளுங் களவுபோயினவா? நன்றுநன்று அரண்மனைக்குள்ளிருக்கும் பொருள்களைக்காப்பாற்றமாட்டாத நானோ அவனி

யெல்லாம் புரக்குமரசன்! என்னுடைய ஆளுகை வெகு நன்றாயிருக்கிறது. இனி என்னையும் எனது செங்கோலையும்வைத்துக்கொளுத்தவேண்டியதே யன்றி வேறென்னசெய்யவிருக்கிறது. என்ன அபசாரம்! என்னபாதகம்! இப்பாவி இனி யெவ்வாறுய்யப்போகின்றேன்" என்று தம்மைத்தாமே நொந்து பேசிக்கொண்டிருக்கையில், சகலவேதியர்களும் வேலைக்காரர்களும் மந்திரிகளும் அங்கு வந்துகூடினர் அரசர் படுந்துயரத்தைக் கண்டு அமைச்சர்களும் பொறுக்க மாட்டாது வருந்துபவர்போல் பாசாங்கு பண்ணலாயினர். அவரை அழுதகண்ணால் நோக்கிய குலசேகரர்," மதிமந்திரிகாள்! என்னசொல்ல! நமது அரசாட்சியின் சிறப்பை, உடலுக்குள்ளிருக்கும் உயிரே போல, இங்கு அந்தரங்கமான ஆலயத்துள் எழுந்தருளிவித்திருக்கும் எனது ஐயனது அணி கலங்களுங் களவு போயின என்றால் வேறு என்ன சொல்ல இருக்கிறது. இதனை என்னெடொத்த அரசர்கள் கேட்டுக்கெக்கலி கொட்டிக் கேலிபண்ணுவதன் முன்,இவ்வற்பவுயிரை உடலைவிட்டுநீக்குவதற்கு வேண்டும் முயற்சியை நாம் இன்னுஞ்செய்யாமாவிருக்கிறோமே! ஓ மதிவலாளரே! என்னைப்போல் உலகத்தைக்கண்ணுங்கருத்துமாய்க்காவல்புரியும் ஒரு காவலனையும், உம்மைப்போல் அரசகாரிய துரந்தரரான அமைச்சர்களையும் நீர்எங்கேயாவது

பார்த்ததுண்டோ? அல்லது கேள்விப்பட்டதாவதுண்டோ? பளா பளா வெட்கக்கேடு இதனினும் வேறில்லை எனது ஆத்ம நாயகனும் ஐயனுமான ஸ்ரீஇராகவர் திருப்புயங்கள், வெளிச்சென்றிருக்கின்றனவே; அவைமுன் தசரதனால் வனவாசத்துக்கனுப்பப்பட்டகாலத்திலிருந்த ஒருகாலத்தை, இப்பாவிகண்ணுக்குந்தோற்றுவிக்கின்றனவே; அது தெரிந்து பொறுது தசரதன் பிராணனை விட்டான்; இப்பாதகனுக்கும் அப்பதவி இன்னும்கிடையாமலிருக்கின்ற காரணமென்னையோ? எனப்பற்பலவாறு பிரலாபித்து, மீண்டும் அமைச்சரை நோக்கிச் சினந்து இன்னுஞ் சிறிதுபொழுதில், திருவாபரணத்தோடு திருடனையுங் கொணர்ந்து என் முன்னிலையிற் சேர்த்தாலன்றி நான் உண்பதுமில்லை உறங்குவதுமில்லை, இது சத்தியம் சத்தியம், என்றுரைத்துக் கூற, மந்திரிகளும் அவ்வண்ணஞ் செய்யாவிட்டால் நாங்களும ஜலபானங்கூடச் செய்வதில்லை எனப் பிரதிகனை கூறி அவரை வணங்கி விடைகொண்டு பரபரப்புடன் தேடுவார் போல் நாலுதிக்கிலும் ஓடி ஓடி விசாரிக்கத்தலைப்பட்டனா.

மூகூர்த்தம் மூன்று சென்றதும் அமைச்சர் வெகுதூரம் ஓடித்தேடி இளைத்தவர்போல், முகத்திற் சோர்வும் யாக்கையில் தளர்வுங்காட்டி,

இறைவரை அடுத்து வணங்கி நாக்குளற "சுவாமி எம்போன்றோர்க்கெல்லாம், இப்பொழுது உத்பாதகாலம் வந்துவிட்டதாக நாங்கள் நினைக்கிறோம். களவு என்ற நாற்றமே இல்லாத இந்த நாட்டில் தற்காலம் நேர்ந்திருக்கும்; ஆச்சரியகரமான திருட்டை உத்தேசித்து, வெளியில் தலை நீட்டவுங்கூடயோக்கியதையற்றவர்களாய்ப் போய்விட்டோம். நாங்கள் விடைபெற்றுச் சென்றதுமுதல் ஒரு கணப்பொழுதும் வீண் போக்காமல் எங்கெங்குந் தேடினோம்; தேடாத இடமுங் கேளாத மனிதருமில்லை. ஆனால் நாங்கள் தேடாத இடம் இந்த இராஜகிருகமொன்று தான். இங்குள்ளவர்களையும் விசாரிக்க வில்லை; யோசிக்குங்கால் ஆபரணங்கள் இந்த இடத்தை விட்டப்பாற்பட்டதாகவும் எங்களுக்குத் தோன்றவில்லை. உத்திரவானல் விசாரித்துத் தேடிக் கண்டுபிடிக்கலாம் எனலும், குலசேகரர் அதற்கென்னதடை அவ்வாறேசெய்யுங்கள், என்றனர். உடனே அவர்கள் அந்த அரண்மனை முழுதும் தேடுவார்போல் சுற்றித்திரிந்துவிட்டு வைணவர்களையும் விசாரித்தார்கள். அப்பால் அவர்கள் காவலரைக்கண்டு சுவாமி! அணிகலங்களைக் களவாடியவர்கள் இந்த அரண்மனையை விட்டப்பாற்பட்டிருக்கவில்லை. அவர்களிங்குள்ளவர்கள்தான். இப்பொழுதுமவர்கள் இங்குதானே

யிருக்கின்றனர். அவர்களை இன்னாரெனச்சொல்லு
தற்கும் அடியேங்களின் நாக்கெழவில்லை. நாங்க
ளென்னசெய்வோம்" என, வேந்தர், அதென்ன
தாக்ஷண்யம் "கள்ளனுக்கேது உள்ளத்திளக்கம்"
களவாடியவர்கள் பெறறோராலும் பிள்ளையாலு
லும், உடனே அவர்களைத் தண்டிக்கவேண்டும்
என நீதிநூல்கள் வரையாது கூறுகின்றனவே.
களவு கண்டுபிடிக்கும் விஷயத்தில் நீங்கள்
எவர்க்குஞ் சிறிது அச்சங்கொள்ள வேண்டுவ
தில்லை. அறக் கடவுளொன்றுக்குத்தான் நாமெல்
லோரும் அஞ்சிநடக்க வேண்டியவரா யிருக்கின்
றேம். ஆதலால் இப்பொழுதே நீங்கள்
அந்தத் திருட்டுப்பயலைப் பிடித்திழுத்து அறை
யுங்கள் உதையுங்கள், உண்மைவெளிப்படத் தீயி
லிட்டு வாட்டுங்கள், எப்படியாவது திருவாபர
ணங்களைத் தருவியுங்கள்" எனலும், அமைச்சர்
தமது மனோரதம் நிறைவேறிற்றென்று, உள்ளக்
களிப்புடன் வேந்தரை வணங்கி, அவ்வாறே
செய்து ஒரு நிமிடப்பொழுதில் கள்வனோடு
கலங்களையு மிதோ கொண்டுவந்து விடுகிறேம்
என்று திரும்புகையில், குலசேகரர் அவரை
நோக்கி, "உமக்கு எவர்பேரில் சந்தேகம்" என்று
கேட்டனர். அதற்கு அவருள் நெஞ்சஞ்சா
னொருவன் "அர்ச்சகரிடத்திலும் புராணிகரிடத்
திலும் தான்" என்றான். இது கேட்டதும்

மன்னவர்க்கு மனந்திடுக்கிட்டது மதிமயங்கிற்று. ஒன்றுந்தோன்றுமற் சிறிது நேரமிருந்துவிட்டு அமைச்சரை அருகிலிருக்கச்செய்து கூறலானுர்.

"எனது கருத்துக்கினிய கலைவல்லாளரே! என்ன நினைத்தீர்? என்னசெயத் துணிந்து விட்டீர்; பகவத் அபசாரம் போதாதென்று பாகவதர்களை அவமானப்படுத்தும் அபசாரத்தையும் எமது தலைமேற் சுமத்த எத்தனப்பட்டுவிட்டீரே. இனி யான் என்னசெய்யப்போகிறேன் அந்தப் பகவான், ஒருவர் தமக்குச் செய்த தீங்கைப் பொறுத்தாலும் தமது அடியவர்க்குச் செய்யும் அபசாரத்தை ஒருநாளும் பொறுக்கமாட்டாரே. மாலிற்பெரியார் மாலடியார் என்பர். ஆதலால் இவர் கோபத்தால் வரும்பாவங்களுக்கு நிவர்த்தி, எப்படிப்பட்ட நூலிலுங்கூறப்பட்டிருக்க மாட்டாது என்பது திண்ணமே. நிற்க பொதுவாக உண்மையான விஷ்ணுபக்தர்ளெவரும் நல்லொழுக்கத்தினின்றும் தவருதவராதலால் அவர் ஒருபொழுதும் திருடவேமாட்டார்கள். பொய்புகல அவர் நினைத்தாலும் அவர்களது நா எழவேமாட்டாது. இங்கிருக்கப்பட்ட வைணவ சிகாமணிகளோ மஹா உத்தயோத்தமர்கள், பாபதோஷங்களுக்குப் பயந்து நடப்பவர்கள், ஸ்நானமும் ஜபமும் பூஜையும் புராணமு

மாகவே பொழுதுபோக்குகிறவர்கள், ஆசையற்றவர். இப்படிப்பட்டவர்க்கும் எனக்கும் ஆசாரியராயிருப்பவராகிய அர்ச்சகர் புராணிகர் என்னும் இரண்டு சுவாமிகளின் குணவிசேஷங்களைப் புகழ்ந்துபேச என்னாலாவதோ? அவர்களை சாதாரண மனுஷர்கள் என்று நான் நினைக்கவில்லை. ஈஸ்வராம்சமான பரிசுத்தர்கள். மஹாமேதாவிகள்; மேலான ஞானிகள்; காமக்குரோதாதிகளைச் சுட்டெரித்தவர். இப்படிப்பட்ட சாதுக்களைக் கள்வரென்று சொன்னீரே, அப்படிச் சொன்ன நாக்குப் புழுவாய்ச்சொரியாது இன்னமும் நன்றாயிருக்கின்றதே. இதுவுங் கலிகாலத்துக் கொடுமைகளிலொன்றுபோலும். மதிவலீர்! போனதுபோக, இனியேனும் நிரபராதிகளான ஸத்புருஷரின்மேல் படாப்பழிசுமத்தி அடா நரகத்துக்காளாகாதிருங்கள். அவர்மேற்கொண்ட சந்தேகத்தைவிட்டொழியுங்கள். வேறு உசாவுங்கள்" என்றார்.

இவையெல்லாங் கேட்ட மந்திரிகள் அரசரை நோக்கி, இப்படியெல்லாஞ் சொன்னால், கள்வரைக் கண்டுபிடிக்கவாவது களவுபோன பொருளைக் கண்டுபிடிக்கவாவது ஒரு பொழுதும் முடியாது. களவாடியவன் நெற்றியில் "இவன் கள்வன்" என்று எழுதப்பட்டிருக்கவுமாட்டாது.

சில அறிகுறிகளைக்கொண்டு தக்கபடி தண்டித்து உண்மையோடு களவுசெய்த பொருளையுங் கக்கும் படிசெய்வதே, உலகவழக்கொடு மனு வழக்குமா யிருக்கின்றது. அதனாலேயே யாங்கள் பூசாரி யோடு புராணிகரையுங் குறிப்பிட்டோம். அவரே பூஜை முதலான கைங்கரியங்களை நடத்துபவர்; திறவுகோலும் முத்திரையும் அவர் கைவசத் தனவே; இப்படியெல்லாமிருக்க அவரையறி யாது, அப்பணிகளெங்கேபோய்விடும். அவரே திருடர், எங்கள் மனம் இவ்வாறு துணிகையில் தேவரீர் அவரது யோக்கியதையைப் பற்றி விளக்குகின்றீர்கள். இக்காலத்தில் கள்வர்களும் யோக்கியர்களைப்போலவேதான் வேஷம் மாறு டித்திரிகிறார்கள். அவர்களைப்பிரித்தறிவது முடி யாதகாரியம். இவ்விஷயத்தைப்பற்றிச் சில சொல்ல நினைக்கிறோம். கேட்டருள வேண்டுகின் றோம்" என்று மேற்சொல்லுவார்கள்.

உலகத்தில் கள்வர் பலவிதப்படுவரேனும் அவரெல்லாம் இராத்திருடர் பகல்திருடர் என் னும் இரண்டு வகுப்பிலடங்குவர். இவ்விருவகுப் பாரிலும், பகல் திருடரே மற்றைய கள்வரைப் பார்க்கிலும் ஆயிரமடங்கு வல்லமையுள்ளவ ராவர். ஏனென்றால் இவர்கள் இருட்டின் ஸஹாயமும் கன்னக்கோல் முதலானகருவிகளும்

இல்லாயலேயே பொருள்களைக் களவாடுதலா
ஞல்தான். இந்தப்பகல் கள்வரும் பலவிதப்
படுவர். சடைக்கள்ளர், சன்னியாசக் கள்வர், சன்
னதக்கள்வர், தியானக்கள்வர், ஸ்நானக்கள்வர்,
பூசைக்கள்வர். புராணக்கள்வர், ஜபக்கள்வர், தபக்
கள்வர், விபூதிபூசுங்கள்வர், திருமண் தீட்டுங்
கள்வர், அழுங்கள்வர், தொழுங்கள்வர், அழு
தழுது விழுங்கள்வர், ஆசாரக்கள்வர், கும்பிடுங்
கள்வர், கூத்தாடுங்கள்வர், வைதிகக்கள்வர்,
லௌகிகக்கள்வர் முதலாயினோர். இவர்கள் ஒவ்
வொருவரும் மஹாமாயாவிகள், பெரும் வஞ்ச
கர்கள். இவர்கள் செய்கின்ற மோசங்களை எவ
ராலுந்தெரிந்துகொள்ளவியலாது. மருந்தாலும்,
மந்திரத்தாலும், நடையாலும், நடிப்பாலும், நய
வசனங்களினுலும் இவரால்பொருள் பறிகொடுத்த
வர்க்களவே இல்லை. அவ்வரலாற்றினைப்பற்றி
விரித்தால் அது இங்கு அடங்குவதுமில்லை.
காவலரே! "இங்கு நம்மையெல்லாம் மயக்கவந்
திருக்கும் கள்வர்கள் யாவரென்றால் பூசாரிக்கள்
வர், புராணக்கள்வர், திருநாமந் தீட்டுங்கள்வர்,
தொழுங்கள்வர், அழுங்கள்வர், ஆசாரக்கள்வர்
முதலிய சிலரேயாவர், இவர் சிறிது காலத்துள்
வெகுதந்திரமாய் நம்மை யெல்லாங் கைவசப்
படுத்தி, நினைத்தபடியெல்லாம் ஆட்டிவைக்கின்ற
னர், அல்லாமலும், இவர் இவ்வரண்மனையில்

அடுக்களைமுதல் ஆசார வாசல்வரையும் தடையின்றிச் சென்றுலாவிச் சர்வாதிகாரியங்களையுந் தமக்கே யுரிமையாக்கிக்கொண்டு விட்டனர். நாமும் அவரிட்ட மாயப்பொடியால் மதிமயங்கி, அவர் தாளில் வீழ்ந்துவணங்குவதல்லாமல், தட்டிச்சொல்லுதல் என்ற எண்ணமேயுண்டாகாமற்போய்விட்டோம். இன்று ஆபரணத்தைக் கொண்ட இவர்கள் நாளை இவ்வரசையுங்கவர்ந்து கொண்டு நம்மையும் அப்பாற்படுத்திவிட்டாலும் விடுவார்கள். ஆதலால், அரசே! இனியேனும் இவர்பாலுள்ள அன்பை அடியோடு நீக்கி, ஒவ்வொருவரையுங் கயிற்றாற் பிணித்து கழியாற் புடைத்து நகக் கண்களில் ஊசியேற்றுவித்து, கனலிலிட்டு வாட்டிக் களவாடிய கலங்களுடன் இதுவரை நம்மிடங் கவர்த்துகொண்ட பொருள்களையும் வட்டிவாசியுடன் கதறிக்கொண்டுவந்து கொடுக்கும்படிசெய்து, இந்நாட்டை விட்டும் அப்பாற்படுத்துவீர்களாக. இப்படிச்செய்யாமல், இன்னுஞ் சிலகாலம் இவரையிங்கு இருக்கவிடின், எண்ணிலடங்காத ஆபத்துக்களுக்கெல்லாம் நாமிடமாவோ மென்பதற்கையமில்லை" என்றார்.

இவ்வண்ணம் மந்திரிகள் சொல்லிய சொற்களெல்லாம் காய்ச்சிய நாராசத்தைக் காதிற்செருகியதுபோற் கேட்ட குலசேகரர், அந்தக்ஷணமே

உள்ளும்புறமும் துக்கத்தால் வெந்து புண்பட்ட வராய், சிறிதுநேரம் மூர்ச்சைபோயினர். அப்பால் அவர் அவர்களை நோக்கிக் கலைவலீர்! உமது கரையற்ற கல்வி கேள்விகளுங்கூட காலக்கொடு மையால் மழுங்கிவிட்டதைப் பற்றி என்னசொல் லப்போகிறேன். அதிபவித்திரர்களாகிய பாகவதர்கள் மேல் அநியாயமாய்ப்பழிசுமத்தி அவர் களை, அழஅழப் படுத்துகிறீர்களே. இதனாலுங்க ளுக்கு என்ன கிடைக்கப்போகின்றது? அவர்க ளுங்களுக்கென்ன அபராதஞ் செய்தார்கள்? பசுப்போன்ற அந்தப்பிராமணரின் தேஜசு அழுக்கற்ற நடையுடைபாவனை ஆகிய இவை களை யெல்லாம் நன்கறிந்தும், அவர்களைக்கள்வ ரென்றும் கடையரென்றும் கட்டியடித்துக் கனலி லிட்டு வாட்டவேண்டு மென்றும் வாய் கூசாது கடிந்து கூறிகின்றீர்களே; உங்களுக்கு வந்த துணிவுதானென்னை? இருபத்தெட்டுக்கோடி நர கங்களையும் இருப்பிடமாகக் கொள்ள இலகுவில் வழிதேடிக்கொண்டு விட்டீர்களே. அவ்வழியில் என்னையும் இழுக்கின்றீர்களே. ஓ தெய்வமே! இனியான் என்ன செய்யப் போகிறேன் என்று பற்பலவாறு பிரலாபித்துவிட்டு, ஸ்ரீ இராம பிரானை நோக்கி “அநாதரக்ஷகா! ஆபத்பாந் தவா! இவ்வாறெல்லாம் பரீக்ஷிக்க இவ்வெளி யோனே பாத்திரமாவேன்; இவ்வேழையை இவ்

வாபத்தினின்றுங் காப்பாற்ற, உம்மையன்றி வேறு யாரிருக்கின்றனர்? சுவாமி உமது அடைக்கலம் அடைக்கலம், காத்தருள்க, காத்தருள்க" எனக்கத்திக்கதறித் துக்கத்தால் அறிவுமயங்கி மூர்ச்சை போயினர்.

பிறகு சிறிதுதெளிந்து அமைச்சரை அழைத்து, தம்மைச் சூழ்ந்துகொண்டு வியாகுலக்கடலில் மூழ்கி அழுதகண்ணுஞ்சிந்திய மூக்குமாய்த் தாமரையிலேத் தண்ணீர்போல் த த் த ளி த் து க் கொண்டிருக்கும் வைணவ விப்பிரர்களைச் சுட்டிக்காட்டி இந்தக்கோப்பிராமணரின்மீது, உமக்குச் சந்தேகமிருக்குமாயின் தண்டோபாயத்தாலல்லாமல் "உண்மைகூறல்" என்னுமுறைமையால், தெளிந்து கொள்ளக்கூடாதா? என்பொருட்டேனும் நீங்கள் இவரை இவ்வாறுதெளியக்கேட்டுக் கொள்கிறேன்" என்று இரக்கமொழியால், இறைவன் கேட்டுக் கொள்ளலும், அமாத்தியர் அரசர்க்கு அந்த அந்தணர்மேல் ஏற்பட்டிருக்கும் அபிமானத்தின்பெருக்கத்தைக்கண்டு, அவர்பால் மிகுதியும் மனங்குழைதலேப் பெற்றாராயினும், வை ண வ ரி ன் மேற்கொண்ட வயிரம் அவருக்குச் சிறிதுமாறவில்லே, ஆதலால் அதற்குத் தக்கபடி அவர் பிரமாணமொன்றைக் 'குறிப்பிடலாயினர்.

"தராதிபரே! தாங்கள் உத்திரவிட்டபடியே, அவர்கள் உண்மைகூறி மெய்ப்பித்தாலும் போதும். எப்படிப்பட்ட உண்மையென்றால், சில குடங்களிற் சர்ப்பங்களையடைத்துக் கொணர்ந்து வைப்போம், பூசாரிபுராணிகர் முதல் ஒவ்வொருவரும் அக்குடங்களிலிருக்கும் பாம்புகளை இரண்டு கைகளாலும் வாரியெடுத்து, ஸ்ரீராமபிரான் சாக்ஷியாக நான் அத்திருவாபரணங்களைத் திருடவே இல்லை இது சத்தியம்" என்று சொல்லி மீண்டும் குடத்துக்குள் அப்பாம்புகளைவிட்டுவிடல் வேண்டும், இவ்வளவே. இவ்வளவு தானுமவரைப் பரிசோதிக்கக் கூடாதா? கூடாதென்றால் உண்மை என்பதை எவ்வாறுதான் கண்டுபிடிப்பது" என்று கூறிக்கொண்டு வருகையில் இடியோசை கேட்ட நாகம்போல் துணுக்குற்ற காவலர் நெஞ்சம் முன்னிலும் பதின்மடங்கான சோகத்தீயால் கருகியெரியத் தலைப்பட்டது. அக்கணமே அவர் ஸ்மரணை தப்பி சித்தப்பிரமை கொண்டவரைப்போல் அசைவற்றிருந்துவிட்டார்.

இப்படி இவர் வாளா இருத்தலைச் சம்மதித்திருக்கும் பாவனையாகக்கருதிய மந்திரிகள் அப்பொழுதே பாம்புகள் நிரப்பிய குடங்களை வரிசை வரிசையாகத்தருவித்துவைத்தனர். வைணவர்கள்

அங்கங்கே தப்பி ஓடிப்போகாதபடி கோட்டைவாயில்களிற் காவல்வைத்தனர். அவர் களேமறித்துக் கொணர்ந்து ஒருவரிசையாக அர சர் முன்னிலேயில் நிறுத்தி, "பாம்புகளே எடுங்கள் உண்மை சொல்லுங்கள்" எனக் கடுகடுத்த கோபத் துடன் நெருக்கலானுர்கள். வைணவரோ தமக் கடுத்துவிட்டபிராணுபத்தையுன்னியுன்னிஉடலு முயிருங் குறுக, சோரென்று கண்ணீர் சொரிய முன்னிலேயிலிருக்கும் அரசரையும் ஸ்ரீ அபிராம மூர்த்தியையும் பார்த்துப்பார்த்து ஹோ! என்று கதறித் தொண்டையைக் கிழிக்கலானுர். இப்படி யிருக்கையில் சிறிது மயக்கம் நீங்கி அறிவு கொண்டகுலசேகரர், திடீரென ஆவேசங்கொண் டவர்போல் எழுந்து குடங்களிலிருக்குங் கோடி சர்ப்பங்களேயெல்லாம்தமது இரண்டுகைகளாலும் வாரியெடுத்து மார்பிலும் தோளிலும் கையிலு மாக அணேத்துக்கொண்டு, "ஓ மந்திரத்தலேவர் களே! ஆகாசவாணியே! பூமாதேவியே! மாசற்ற இந்த மாலடியர் திருவாபரணங்களேத் திருடி யிருப்பாரேயானுல் அவர்கள் பொருட்டு இந்த விஷப்பாந்தள்கள் என்னேக் கடித்துக் கொல்லுக' என மும்முறை கூறி, அவைகளேக் குடத்துள் விடுத்தனர். விடவே அந்த அரவினங்கள் அர சரையும் அந்தணர்களேயும் வலஞ் சூழ்ந்து

வணங்கிவிட்டு, மந்திரிகளை நோக்கிச் சீறிச் சினந்து விஷச் சுவாலைகளைக் கக்கிக்கொண்டு விரைந்து வருதலும், அவர் யாவரும் அவ் விடம்விட்டு ஒருவர் ஓடிய வழி ஒருவர் ஓடாது விரைந்து பாய்ந்து மறைந்து கொண்டனர். பன்னகங்களும் ஆங்காங்குள்ள பிலங்களிற் புகுந் தொளித்தன.

அப்பால் அந்தணர் அளவில்லாத ஆனந் தங்கொண்டவராய்த் தமக்குப் பிராணதானஞ் செய்த ஆழ்வாரைக் கட்டித் தழுவி அன்பார்ந்த கனிவுடன் ஆசிகூறினர். அவர் தம்பக்திக் கட லில் ஆழ்ந்தபெருமாளாகிய குலசேகரரும் அவர் கள் திருவடிகளில் சாஷ்டாங்க தண்டம் சமர்ப் பித்து, "சுவாமிகாள்! உங்களுக்கு நேர்ந்த இவ் வாபத்துக்குக் காரணமானவன் யானேயன்றி வேறில்லை; அப்படிப்பட்ட என்னையும் ஆசிகூறி அளவளாவினீர். பொறுமையென்னும் ஆப ரணத்தை உம்மையன்றி மற்றெவரே உலகத் தில் அணிந்தவர்" எனப்பற்பல புகழ்ந்து பேசினர். பிறகு எல்லோரும் ஸ்ரீஇராமபிரானை நமஸ்கரித்துஎல்லாம்அவரது திருவிளையாடலே யாகும் எனச்சிந்தை செய்து கொண்டிருக்கை யில், ஓடிஒளித்த அமாத்தியர் செய்ததீமையே தம்மனத்தை வருத்த, மானமும் இலச்சையும்

உயிரை அழுத்த, தளர்ந்த நடையுஞ் சோர்ந்த முகமும் கவிழ்ந்த தலையுமுடையவராய், முன் கவர்ந்தொளித்த, ஆபரணங்களையுங் கையி லெடுத்துவந்து, ஆழ்வாரது முன்னிலையில் வைத்து, தாங்கள் நினைத்ததுஞ் செய்ததுமாகிய காரியங்களை யெல்லாம், ஆதியோடந்தமாக நாக்கு நடுங்க விண்ணப்பஞ்செய்து, அபராத க்ஷமணஞ் செய்தருளுமாறு, ஆயிரக்கணககான வந்தனத்தை அரசரோடு அங்குள்ள அந்தணர் யாவர்க்கும் சமர்ப்பித்து நிற்பாராயினர்.

அறிவீனத்தால் அடாதுசெய்த அந்த அமைச்சரின் மேல் ஆழ்வாருக்குச் சிறிதும் சினமேற்படவில்லை. அவர் அவரை நோவதிற் பிரயோஜனமில்லையென்று தள்ளி, இப்படியெல் லாங்கொண்டுவந்துவிட்ட தமது பாழான கர்ம வினையையே பெரிதும் வெறுத்தவராய் அவரைப் பார்த்து, "எமது அருமை அமைச்சர்காள்! நீங்கள் செய்தன எல்லாம் எமக்கு நன்மையே தருவனவாயிருக்கின்றன. நீங்கள் இவ்வாறெல் லாஞ் செய்யாவிட்டால் இவ்வுலக வாழ்க்கை யிலும் இராஜரீகத்திலும் எனக்கு வெறுப்புண் டாகவாவது, ஸத்கதியை நாடி வெளிப்படுதற்கா வது, காரணமெதுவுமுண்டாகமாட்டாதென்பது திண்ணம். ஆகையால் நீங்கள் என்மாட்டு எப் பவும் நன்மையே செய்பவராயிருக்கிறீர்கள்"

இனியான் மனதாரச்சொல்லும் விஷயங்களைக்கேட்டு மனமொப்பிச் சிறிதும் மாறுபடாது, நடக்கும்படி கேட்டுக்கொள்ளுகிறேன். "நானிப்பொழுதே நற்கதியை விரும்பி, திவ்விய தேச யாத்திரை செய்யப்புறப்பட்டு விட்டேன்; அருவருப்புக்கிடமான இவ்வரசாட்சியை இதோ யான் கைவிடுகின்றேன். திரிலோகாதிபத்யம் வருவதாயிருந்தாலும்திரணமாத்திரமுமதியேன்; இனியிந்த உலகத்துக்கும் இவ்வுடலுக்கும் எனக்கும் யாதொரு சம்பந்தமுமில்லை என்பதை நீங்கள் நன்கறிவீராக: யான் விரும்பியது பரமபதமொன்றேயாகும்" என்றருளிக் கல்விகேள்விகளிற் சிறந்தவனும் அதிபராக்ரமசாலியுமான தமது குமாரனுக்குப் பட்டாபிஷேகஞ் செய்வித்துப், பல புத்திமதிகளுஞ் சொல்லி, மந்திரிகளுக்கும் ஆவன பலமொழிந்து, அடுத்துள்ள அந்தணர்கோஷ்டியுடன் தீப்பற்றியெரியும் வீட்டைவிட்டு வெளிப்படுவார்போல் அந்தக் கொல்லிப் பெருமாள் அரண்மனையைவிட்டு வெளிப்பட்டுத் திருவரங்கமென்னுந் திவ்விய க்ஷேத்திரத்தை நோக்கிப் பிரயாணமானார்.

ஸ்ரீரங்கஞ்சென்ற குலசேகரர் அங்கு அனந்தாசனத்தில் அறிதுயில் அமர்ந்தருளும், ஆதியெம்பெருமானைக் கண்படைத்ததின் பயனாகச் சேவைசெய்து, பக்தியின்முதிர்ந்த ஈடுபாட்டால்,

உள்ளமும் உடலும்இளக, மயிர் கூச்செறிய, ஆனந்தபரவசராய் அமிர்தமயமான பாமாலைகளால், அலங்கரித்து, சிலகாலமங்கிருந்தனர். அப்பால் அவர் திருவேங்கடம், திருக்கணபுரம் திருச்சித்திரகூடம் (தில்லை) திருவித்துவக்கோடு முதலான தெய்வஸ்தலங்களிற்சென்று, ஆங்காங்கெழுந்தருளி விளங்கும் எம்பெருமான்களின் விஷயமாகவும் வேறு பொதுவிஷயமாகவும் தென் மொழியிலும் வடமொழியிலும் பிரபந்தங்கள் பாடியருளி, மற்றும் நாட்டிலுள்ள க்ஷேத்திரங்களையும் வணங்கி வலங்கொண்டு, கடைசியாய்ப் பாண்டிநாட்டில் பிரமதேசமென்னும் பதக்கத்துக்குச் சிகாமணிபோல் விளங்கா நின்ற மன்னார்கோவில் இராஜேந்திரவிண்ணகரம் என்னும் தலத்துக்கெளுந்தருளி, ஆங்குத் திருக்கோயில் கொண்டு விளங்கும், ஸ்ரீ இராஜகோபால கிருஷ்ணசுவாமியை (இராஜேந்திர விண்ணகரத்தெம்பெருமானை) சேவைசெய்து கொண்டிருந்தனர். காலஞ்சில செல்ல அத்தலத்திலிருந்தே பரமபதத்துக்கெழுந்தருளினர்.

ஆரங் கெடப்பரன் அன்பர்கொ ளாரென் றவர்களுக்கே
வாரங் கொடுகுடப் பாம்பிற்கை யிட்டவன் மாற்றலரை
வீரங் கெடுத்தசெங் கோல்கொல்லி காவலன் வில்லவர்கோன்
சேரன் குலசே கரன்முடி வேந்தர் சிகா மணியே.

---

இக்குலசேகர ஆழ்வார் அர்ச்சாவிக்ரகத் திருக்கோலத்தை, மேற்படி மன்னார்கோவில் ஸ்ரீ ராஜகோபால கிருஷ்ணசுவாமி சந்நிதியிலுள்ள, தெற்கேபார்த்த ஓர் சிறிய கோயிலுள் இப்பொழுதுங்கண்டு சேவிக்கலாம்.

முற்றிற்று.

---

## ஸ்ரீ குலசேகர ஆழ்வார் கோயிலிலுள்ள

## சிலா சாஸனங்கள்

ஸ்ரீகுலசேகர ஆழ்வார் கர்ப்பக்கிரகம் மேலப் பிரகாரத்தில்தெற்கிலிருந்து ஆரம்பிக்கப்பட்டது.

---

### 1-வது சாஸனம்

ஸ்வஸ்திஸ்ரீ கோமாறவர்மரான ஸ்ரீபுவன சக்ரவர்த்திகள் சோணாடு வழங்கிய ஸ்ரீசுந்தர பாண்டிய தேவர்க்கு யாண்டு கச, 1-வது முள்ளி நாட்டுப் பிரமதேச ஸ்ரீராஜராஜ சதுர்வேதிமங் கலத்து ராஜேந்திர சோழ விண்ணகரத்திருப்பதி வைஷ்ணவர்களோம் பிர்ம்ம வித்வான்களுக்குச் சமைந்த ஆழ்வார் ஸ்ரீபராங்குசமாமுனிகளுக்குப்

பிடிபாடு கொடுத்த பரிசாவது, இக்கோயிலில் ஆழ்வார் ஸ்ரீ குலசேகரப்பெருமாளை யுகந்தருளி வித்த மலைமண்டலத்து முல்லைப்பள்ளி வாசுதேவன் கேசவனான செண்டலங்காரதாஸர் இந்த ஸ்ரீகுலசேகரப் பெருமாள் ஸ்ரீகாரியங்களும் திருவிடையாட்டங்களும் அமுதுபடி சாத்துப்படியுள்ளிட்டு வேண்டும் நித்தல் நிமந்தங்களும் திருப்பணிகளும் பரிகரித்து நோக்கத்தோடு போகுவாராக. முன்பிடிபாடு கொடுத்தமையில் நாங்களும் இக்கோயிலிலுள்ள நித்தல் நிமந்தங்களும் இந்நாயனார் திருவிடையாட்டக்காரியங்களுள்ளவையும் இவர் சொன்னபடி செய்து கொடுப்போவோமாகவும். இப்படிச்செய்தாருண்டாகில் அவர்கள் நிமந்தங்களும் மாற்றி, தமக்கு வேண்டுவாரை நிமந்தத்துக்கிட்டுக் கொள்வாராகவும். இப்படி சம்மதித்துப் பிடிபாடு கொடுத்தோம். ராஜேந்திர விண்ணகரத்திருப்பதி ஸ்ரீவைஷ்ணவர்களோம் பிரமவித்வான்களுக்குச் சமைந்து ஆழ்வார் ஸ்ரீபராங்குசமாமுனிகளுக்கு. இவை திருவரங்கப்பிரியன் எழுத்து, இவை வடபெருங்கோயிலமுதின் எழுத்து, இவை ஹநுமதாஸன் எழுத்து, இவை ராவணாந்தகதாஸன் எழுத்து, இவைபெரியகோயில் வள்ளல் எழுத்து. இவை திருக்குறுங்குடிவள்ளலெழுத்து, இவை திருவரங்கத் தமுதினர் எழுத்து, இவை

திருவயோத்தியரயன் எழுத்து, இவை ஸ்ரீ, (ஸ்ரீ) சடகோபநம்பி எழுத்து, அணியரங்கப்பிரியன் எழுத்து, இதுதிருக்குருகூர் தாஸர் தற்குறியான மைக்கு இவை திருமாலிருஞ்சோலைப் பிரியன் எழுத்து இவை திருநறையூர் தாஸன் எழுத்து, இவை காக்கண்டூர் நம்பி எழுத்து. இவை ஸ்ரீ சடகோபப்பிரியன் எழுத்து, இவை குலசேகரத் தமுதின் எழுத்து, இவை திருச்சித்திரக்கூடத் தமுதின் எழுத்து, இது திருக்குறுங்குடி தாதர் தற்குறியானமைக்குபிஞ்ஞூரான் அவனிமார்த் தாண்டபுரத்து தேவபூமா(ன்) எழுத்து, இவை திருவரங்கத்தரயன் எழுத்து, இவை அமுதினூர் எழுத்து, இவை பெரியகோயில் பிரியன் எழுத்து இவை இசையறியும் பெருமாள்வள்ளல்எழுத்து, இது நிம்பைத்திருவேங்கடத்தமுதின் ஸம்க்ஞே மாட்டெறிந்த திருமாலிருஞ்சோலைப் பிரியன் எழுத்து. இவை இவர்கள் சொல்ல இப்பிடிபா டெழுதின திருக்குறுங்குடித் திருப்பதி ஸ்ரீ வைஷ்ணவரில் திருமாலிருஞ்சோலைப் பிரியன் எழுத்து.

———

## 2-வது சாஸனம்

### வடக்குப்பிரகாரம் மேலோரத்திலிருந்து ஆரம்பிக்கப்பட்டது.

ஸ்வஸ்தி ஸ்ரீ ஸ்ரீநாயனுர் ஸ்ரீகுலசேகரப் பெருமானை யுகந்தருளிவித்த மலைமண்டலத்து முல்லைப்பள்ளி வாசுதேவன் கேசவனுன செண் டலங்கார தாஸர் திருவிடையாட்டஞ் சொல்லி எல்லைத்தத்துறவுண்டாகையால் மாளிகை முதற் படி எடுத்துவந்தபடி ஸ்ரீராஜேந்திர சோழர்க்கு யாண்டு கூ-வது ஸ்ரீ ராஜராஜ பாண்டி நாட்டு மது ராந்தகவளநாட்டு ராஜராஜ சதுர்வேதிமங்க லத்துராஜேந்திரசோழவிண்ணகரெம்பெருமாள் திருவிடையாட்டம் குறுமறைநாட்டு விந்தனூர் திரு உலகளந்ததிருமுகப்பிரசாதம் செய்தருளி வந்து புறவரிக்கண்காணி வெண்புநாட்டுக் குரண்டியுடையானும் திருமந்திரஓலைக்கண்காணி அண்டநாட்டுச் செல்லூருடையானும் உள் ளாலைக்கருவுகலத்து ஆரியக்கண்காணி ஏகாவி சோழபிரமாதி ராஜனம் மாளிகைக் கண்காணி இருஞ்சோணுட்டு ஆலத்தூருடையானும் ஆக நாலு கண்காணிகளையும் புகுந்து திருஉலகளந்த ருளவிந்தனூர்நான்குஎல்லையும் காட்டுகவென்று

சொல்ல இவ்வூர் மத்தியத்தன் ஆதிச்சன் பொன்னனும் கொல்லனுன சோலே அரசான விந்தனூர்க் கொல்லனும் தச்சன் மழபாடி வேம்பனுன குறுமறைநாட்டுத் தச்சனும் தட்டான் பூதன்வேளானுன விந்தனூர்த்தட்டானும் ஊர்ப்பறையன் ஐவன் நம்பியான விந்தனூர்ப் பறையனும் இவ்வனைவரும் எல்லேகாட்ட இவ் வூர் கீழெல்லேயும் இந்நாட்டு ஆதனூர் மேலெல்லேயும் நாகப்புற்றுஎல்லேயாகப்போந்து

(தொடர்ச்சி மேல்புறம் வடக்கோரம்)

இடுகல்லும் இதனின்றும் தெற்கு நோக்கிப் போந்து இவ்வூர் தென்கீழ்மூலேயும் ஆதனூர் தென்மேல் மூலேயும் தெற்கில் பாறையுமிதனின் றும் தெற்கு நோக்கிப்போய் மல்லாப்பான் காலிலே சென்று மேற்குநோக்கிக் காலெல்லே யாகப் போய் இவ்வூர் தென்மேல் மூலேயும் மல் லாப்பான் காலெல்லேயாக மேற்குநோக்கிப்போய் விளேத்தலேயிலே சென்று இதன்மேற்கு இடு கல்லும் இவ்வூர் தென்மேல் மூலேயும் தென்வார நாட்டுப் புலியூர் வடகீழை மூலேயும் இதனின்றும் வடக்குநோக்கிப்போய் மணப்புளியே எல்லே யாகக்கொண்டுபோந்து இதன் கீழ்வாயிலிடுகல் லும் இதன்வடக்கு பெரிய மலேப்பொற்றை மேல்சரிவே எல்லேயாகப்போந்து வடவாயி லாணேக்கல்லு இதனின்றும் வடக்கு நோக்கிப்

போந்து ஆற்றையிழிந்து வடகரையிலேறி வட வாறு நாட்டு புதுப்பேர்வெட்டி நத்தத்தை இடத்துவைத்து பள்ளிக்கோயில் எல்லையாக வடக்குநோக்கிப்போந்து இவ்வூர் வடவெல்லை வடவாறு நாட்டுக்கீழெல்லையும் நடுகல்லும் இத னின்றும் கிழக்குநோக்கிப் போய்க் கல்லகநாட்டுச் சேந்தன் பிரமதேயத்துத் தென்மேல் மூலையும் வடவாறு நாட்டுக்கீழெல்லையும் இவ்வூர் வடவெல்லை அச்சொடுபள்ளமும் இதனின்று கிழக்கு நோக்கிப்போய் இவ்வூர் வடகீழ் மூலையும் சேந்தன் பிரமதேயத்துத் தென்னெல்லையும் இந் நாட்டு ஆதனூர் வடமேல் மூலையும் பூவண தானக் குழியெல்லையாகத் தெற்கு நோக்கிப் போந்து ஆற்றையிழிந்து தென்கரையேறிமுன்பு காட்டினவெல்லையில் நாகப்புற்றிலே நின்று மேற்குநோக்கிப் போய் பெரிய மலைப்பொற்றை மேல்வாயிலே விழுந்த ராஜராஜன்கோல் ௬௨௰௩ இதன் தென்னெல்லை மல்லாப்பான் காவிலே நின்று வடக்குநோக்கி வடவெல்லையில் அச்சொடுபள்ளத்தில்விழுந்த உ௬௰௩ ஆகஇவ் வெல்லைக்குள் நத்தமும் நத்தப்பாழும் நீங்கும் நிலம் உ வேலியும் முதுநிலத்தரிசாலும் கன்று மேய்பாழாலும் நீங்கும் நிலம் ௬௨வடிபலகுளங்களி னீர்க்கோவையால் நீங்கும் நிலம் க௬௨ வப பெரிய மலைப்பொற்றையாலும் சினந்துரப்புகளாலும்

ஆற்றூலும் நீங்கும் நிலம் சமகை. தெம். நாயனர் திருவிருப்பாலும் திருமுக்கால் வட்டத்தாலும் திருமடை விளாகத்தாலும் நீங்கும் நிலம் அரைக்காலும் தேவதானமாய் நீங்கும் நிலம் அரைக்காலும் திருவிடையாட்டம் நீங்கும் நிலம் அரைக்காலும் எம்பெருமான் பஞ்சப் பிரகாரம் நீங்கும் நிலம் அரைக்காலும் ஆக இவ்வெல்லைக் குள்ளிந்நிலம் நீக்கி நிலத்துக்குப் புறவரிக்கண் காணி வெண்புநாட்டுக் குரண்டி யுடையா னெழுத்திஞலும் திருமந்திர வேலைக்கண்காணி அணடநாட்டுச் செல்லூருடையான் எழுத்தி ஞலும் ஆரியக்கண்காணி எதிரிலி சோழபிரமாதி ராஜனெழுத்திஞலும் மாளிகைக் கண்காணி ஆலத்தூருடையான் எழுத்திஞலும் திரு உல களந்தருளினபடியின்படி இது கல்லில் வெட்டு வித்த செண்டலங்கார மகாமுனி எழுத்து.

——

## 3-வது சாஸனம்

மேற்படியின் கிழ்புறம் கிழோரத்திலிருந்து ஆரம்பம்.

ஸ்வஸ்தி ஸ்ரீகோமாறவர்மரான திரிபுவன சக்ரவர்த்திகள் ஸ்ரீ சுந்தரபாண்டிய தேவர்க்கு யாண்டு ௨ வதினெதிரா.....வைகாசிமீ முள்ளி நாட்டு பிரமதேயம் ஸ்ரீ ராஜேந்திர சதுர்வேதி

மங்கலம் ஸ்ரீ ராஜேந்திர விண்ணகரம் எம்பெரு மான் திருவிடையாட்டமிக் கோயிலில் நாயனுர் ஸ்ரீ குலசேகரப் பெருமாள் திருநாமத்துக்கு வட வாறு நாட்டு உரிமையழகியானில்.....ககாகம தேவேந்திர வல்லவன் செங்கோல் வேலைக் காரரில் சேனுபதித் தண்டநாயகத் துள்ளிட்ட தந்திரத்துக்குச் சமைந்த காரணவரோம் பிடி பாடு கொடுத்த பரிசாவது. இந்நாயனுர் திரு விடையாட்டம் வேளான்சோலை உள்ளிட்ட பற்று நாங்களனுபவித்துப் போந்தமையில் இத் திருவிடையாட்டம் எல்லைகளிலே திருவாழிக் கல்லு நாட்டிக் கொடுத்து அப்பற்று விட்டுக் கொடுத்தோம் ஊர்க்குச் சமைந்த காரணவரோம் ராஜேந்திர விண்ணகர எம்பெருமான் கோயிலில் நாயனுர் ஸ்ரீ குலசேகரப் பெருமாள் நாமத்துக்கு இப்படி திருவிடையாட்டமாக எல்லைகளிலே திருவாழிக் கல்லு நாட்டிக்கொடுத்த அக்குளப் பற்றுக்கும் மிளகிக்குளம் நிறைந்து விட்ட மறு கால் நீர்...பாய்...ச்சிக் கொள்வாராகவும். மூன்பு வெட்டின பழங்காலாலே நீர் பாய்ச்சிக்கொள்வா ராகவும் இப்படிக்குக் கல்லிலுஞ் செம்பிலும் வெட்டிக்கொள்வாராகவும். இப்படிசம்மதித்துப் பிடிபாடு கொடுத்தோம் படைக்குச் சமைந்த காரணவரோம் நாயனுர் குலசேகரப் பெருமான்

திருநாமத்துக்கு இது அடைப்பித்தான் தற்குறிக்கு இவை குலசேகர மூவேந்த வேளான் எழுத்து. இவை வீரமாணிக்க பல்லவரயன் எழுத்து. பரிநிரை கொண்ட நாடாள்வான் எழுத்து. இவை தேவேந்திர பல்லவரயன் எழுத்து. இவை பக்கரை கொண்ட நாடாள்வான் எழுத்து. இது நிலைமையழகிய நாடாள்வான் தற்குறிக்கும் விருதடக்கி நாடாள்வான் தற்குறிக்கும் வேட்டையழகிய நாடாள்வான் தற்குறிக்கும் உற்றிடத்துதவி தற்குறிக்கும் தென்னங்கன் தற்குறிக்கும் ஆக இவ்வனைவோர் தற்குறியும் மாட்டெறிந்து இப்பிடிபாடு எழுதினேன் இவ்வூர் தந்திரக் கணக்கு அழகியபாண்டி விழுப்பாயன் எழுத்து.

———

## 4-வது சாஸனம்

### மேற்படி கீழ்புரம் தெற்கோரத்திலிருந்து ஆரம்பம்.

ஸ்வஸ்தி ஸ்ரீ கோச்சடையபன்மரான திரிபுவன சக்ரவர்த்திகள் ஸ்ரீ குலசேகர தேவர்க்கு யாண்டு பதின்மூன்ருவதினேராமாண்டு முள்ளிநாட்டுப் பிரமதேயம் ராஜராஜ சதுர்வேதி மங்கலத்து ஸ்ரீ ராஜேந்திர விண்ணகரத் திருப்பதி

ஸ்ரீ வைஷ்ணவ ரோகமும் கணக்கப்பண்டாரி களேமும் இக் கோயிலிலே ஸ்ரீ குலசேகரப் பெருமாளே யுகந்தருளிவித்து தன்மஞ் செய்கிற மலே மண்டவத்து முல்லேப்பள்ளிவாசுதேவன் கேசவனை செண்டலங்கார தாஸர்க்குப் பிடிபாடு கொடுத்த பரிசாவது. இவ்விராஜேந்திர விண்ணகர் எம்பெருமான் திருவிடையாட்டம் குறுமறை நாட்டு விந்தனூரான அவனி மார்த்தாண்ட புரத்து நகரத்தாருடனும் தென்வார நாட்டுப் புலியூராருடனும் எல்லேத் தத்துறவுண்டாய்க் கிடந்த நிலமும் குறுமறை நாட்டு ஸ்ரீவல்லப சதுர்வேதி மங்கலத்தாருடன் எல்லேத் தத்துறவுண்டாய்க் கிடந்த நிலமும் இவர் போய்சாத்தின்படி பார்த்துக் கொடு வந்து வழக்குப் பேசி எல்லேத் தத்துறவு தீர்த்து விடுவித்துக் கொண்ட நிலம் இவருகந்தருளிவித்த ஸ்ரீ குலசேகரப் பெருமாளுக்கு விந்தனூர் நகரத்தார் காரண்மை தன்மதானமாக நீர்வார்த்துக்கொடுத்தமையில் இவர் இந்நிலம் காடுவெட்டிக் கட்டைபறித்து திருவாய்க் குலப்பபே ரேரியுள்ளிட்ட குளங்கள் கல்லிவரம்பிட்டுப் பிரம்பேறித் திருத்தினமையில் அந்நிலத்தில் நன்செய் புன்செய் கடமையுள்ளது மற்றும் எப்பேர்ப் பட்டதுவும் ஸ்ரீகுலசேகரப் பெருமாளுக்கு அமுதுபடி சாத்துப்படியுள்ளிட்ட நித்த நிமந்தங்களுக்குப்பெற

வேணுமென்று மாசித்திருநாளில் நாலாயிரவன் திருமண்டபத்திலே யேறியருளி பிள்ளைதிருப் பாவை கேட்டருளாநிற்க இச்செண்டலங்கார தாஸர் விண்ணப்பஞ்செய் தடத்துப்பிள்ளையுந் திருவுள்ளமாய்ப்பதினெட்டுமண்டலத்திய ஸ்ரீவைஷ்ணவரையுமிவ்வூர் மஹாசபையையும் எங்களையுமழைத்தருளி நங்குலசேகரனுக்கு அடுக்களைப் புறமாக கடமை யந்தராயமு மற்று மெப்பேர்ப்பட்டதுவும் கொடுத்தோம் இப்படிக்கு ஓலையுங்கொடுத்து உங்கள் பிடிபாடுங் கொள்ளுங் கோளென்று திருவாய் மொழிந்தருளினமையிற் பிள்ளைதிருமுகப்படியும் மஹாநியோகப்படியுஞ் செண்டலங்காரதாஸர் கொடுவந்த சாத்தின் படியேஇவர் வழக்குப்பேசி விடுவித்துக்கொண்ட நிலத்துக்குப் பெருநான்கெல்லையாவது கீழெல்லை சுந்தரபாண்டியபுரத்தாரெல்லைக்கும் ஸ்ரீவல்லவ சதுர்வேதி மங்கலத்தாரெல்லைக்கு மேற்கும் தென்னெல்லை மல்லாப்பான்காலுக்கு வடக்கு மே லெல்லை புலியூர்எல்லைக்கும் இவ்வூரிலே நின்றும் விந்தனூருக்குப் போகிறபழையபெ தன்வடற்பெரு வழிக்குக் கிழக்கும் வடவெல்லை தமிழதரயனும் பகவன் திருவாய்க்குலமூங் கல்லின குளத்துக்கு நீர்பாய்கிற கால்பெற்ற ஆயத்துக்குயாகக் குனங் கரையிலே நின்றுமேற்கு நோக்கிப்போன

கொழுங்காலுக்குத் 'தெற்கும் இந் நான்கெல்லைக் குட்பட்ட நன்செய் புன்செயிலுள்ள கடமை அந்தராயமுமற்றுமெப்பெயர்ப்பட்டனவும் ஸ்ரீ குலசேகரப் பெருமாளுக்கு அமுதுபடி சாத்துப் படியுள்ளிட்ட நித்த நிமந்தங்களுக்குந் திருப் பணிக்கும் பிள்ளை திருவாய்மொழிந்தருளினபடி யே கொடுத்தமைக்கு—இவை ஸ்ரீ ஹனுமதாஸன் எழுத்து இவை திருமாலிருஞ்சோலை வள்ள லெழுத்து இவைதிருக்குருகூர்வள்ளலெழுத்து இவை திருவரங்கப் பிரியனெழுத்து இவை திருவரங்க வள்ள லெழுத்துஇவை பெரியகோயி லமுதின் எழுத்து, இவைதிருவரங்க தாதன் எழுத்து, இவை நீலமேனிஅமுதின் எழுத்து, இவை திருக்குருகைப்பிரான் தாதன் எழுத்து, இவை கோயிற்கணக்கு ஸ்ரீவைஸ்ணவப் பிரியன் எழுத்து.

---

## 5-வது சாஸனம்

(அடுத்த வடபாலிலுள்ளது)

திருவாய்க்கேள்விக்குமேல் ஸ்ரீகோமாறபன் மரான திரிபுவன சக்கரவர்த்திகள் சோனாடு கொண்டு முடிகொண்ட சோழபுரத்து வீராபி ஷேகம் பண்ணியருளிய ஸ்ரீசுந்தரபாண்டிய தேவர்க்கு யாண்டு உ௰-வது கங (தனு) நாயிற்று எஉ யும் அபரபக்ஷத்து ஸப்தமியும் திங்கள்

மையும் பெற்ற உத்திரத்து நாள் முள்ளி நாட்டுப் பிரதேயம் ஸ்ரீ ராஜ ராஜ சதுர் வேதமங்கலத்து இவ்விராஜேந்திர விண்ணகரில் உகந்தருளின ஸ்ரீ குலசேகரப் பெருமாள் கன்மிகளுக்கு இவ்வூர் பந்தாஞ்சேரி வங்கிப்புரத்து அழகர்பிரமணிநங்கையாண்டாளுக்கும் இவள்மகள் பெருமாள் பிரமணிப்பிள்ளை யாண்டாளுக்கும் இவ்விருவரும் பத்ருஹீனிகளுமாய் பிள்ளைகளுமில்லாமையாலே நங்கையாண்டாளுக்கு முதுகண்ணான இவள் மகளை விவாகம் பண்ணின மூனுஞ்சேரி கிடாம்பில்வானமாமலை உபாத்தியாயனும இவன் மருமகள் பிள்ளையாண்டாளுக்கு முதுகண்ணான இவள் பிதா நாலாஞ்சேரி வங்கிப்புரத்து நம்பியும் இவ்விருவோரும் இக்கன்மிகளுக்கு விற்றுக் கொடுத்ததோட்டமாவது எங்கள் மூலிகள் குரு பரம்பரையுடையராய் நாங்கள் அனுபவித்து வருகிற தோட்டம் காக்கலூர் வாசுதேவ வாய்க்காலுக்கு தெற்கு கசு, கண்ணுற்று திருவரங்க வதிக்குக்கிழக்கு கூ-செய்நிலம் பலமேற்கடைய நிலம் கூல. வடக்கடைய வங்கிப்புரத்து ஆண்டாள் பிதா இனியானுக்குத்தானமான நிலம் ஜ நீக்கி நின்ற நிலம் சவஸு-, இந்நிலம் அரைமா அரைக்காணி முந்திரிகையும் இவர்களுக்கு ஜீவசேஷமாயிருக்கையிலும் இந்நிலம் வீரசூரிய பல்லவரையனுக்கு முருக்கறை நாயர்க்

கும் ஒற்றியாய் இந்நிலம் இவர்கள் அனுபவித்துப் போருகையாலே இச்சொத்தைக் கைக்கொண்டு எங்களுக்கு ஜீவனம் பிரசாதிக்கவேணு மென்று இவர்களிருவரும் தங்கள் ஞாதிகளைக் கேட்டவிடத்து ஞாதிகள் எங்காளாலிது கைக்கொண்டு உங்களுக்கு ஜீவனம் பரிசரிக்க சிரமமல்ல வென்று இச்சொத்தை உங்களுக்கு வேண்டும் தானதர்ம விக்ரயங்கள் பண்ணி நீங்கள் ஜீவியுமென்று ஞாதிகள் விடுசீட்டுக் கொடுக்கையாலே நாங்களுமிவர்களுக்கமுது கண்ணாய் நின்று இந்நிலம் அரைமா அரைக்காணி மூந்திரிகையும் விற்றுக்கொடுத்தோம் கிடாம்பில் வானமாமலை உபாத்தியாயனும் வங்கிப்புரத்து நம்பியும்இவ்விருவோருமும் ஸ்ரீகுலசேகரப்,பெருமாள் கன்மிகளுக்கு இப்படி விற்றுக்கொடுத்த நிலம் அரைமா அரைக்காணி மூந்திரிகைக்கும் விலைப்பிரமாணமாக நிச்சயித்தவன் ........ டு நல்லானையச்ச ய உ ௭ இவ்வச்சு பன்னிரண்டரைக்கும் விற்று விலைப்பிரமாணம் பண்ணிக் கொடுத்தோம்இவ்விருவோருமும் ஸ்ரீகுலசேகரப் பெருமாள்கன்மிகளுக்கு இப்படிவிற்றுக்கொடுத்த ...நிலத்துக்கு பொருள் செலவாவது முன்நிலத்தின்மேல் ஒற்றியுடைய வீரசூரிய பல்லவரையன் ஒற்றிக்கலத்தில் இவர்கள் ... நானதான முடைய நிலம் மூந்திரிகைக்கு ..... வொரியால ஆக

ஒன்பது மாவின்கீழ் முக்காலும் எங்கள்கையிற் கொண்ட ........ ஆக அச்சு ௰உ இ இவ்வச்சு பன்னிரண்டரையும் விலைப்பொருளாகச்சாத்தி இதுவே விலையோலையும் பொருட் செலவோலை யாவதாகவும்இதுவல்லதுவேறு விலைமாவறுதிப் பொருட்செல வோலை காட்டவும் காணவும் கட வதின்றிவிலைக் குறவிற்றுப் பொருளறக்கொண்டு விற்றுவிலைப்பிரமாணம் பண்ணிக் கொடுத்தமைக் கும் இந்நிலத்தில் மேல்நோக்கின மரமும் கீழ் நோக்கின கிணறும் மற்றுமெல்லா முட்படவிற்று விலைப்பிரமாணம் பண்ணிக்கொடுத்தோ மிவர் களுக்கு மூதுகண்ணுனகிடாம்பில் வானமாமலை உபாத்தியாயனும் வங்கிப்புரத்து நம்பியு மிவ்விரு வோருமும் நாயனர் குலசேகரப்பெருமாள் கன்மி களுக்கு இப்படி ஸம்மதித்து விற்றுக்கொடுத்த என்மாமியார் நங்கையாண்டாளுக்கு மூதுகண் ணுன கிடாம்பில் வானமாமலை உபாத்தியாயன் எழுத்து இப்படி ஸம்மதித்து விற்றுக்கொடுத்த என்மகள் பிள்ளையாண்டாளுக்கு மூதுகண்ணுய் வங்கிப் நின்றபுரத்து நம்பி எழுத்து.



# பெருமாள் திருமொழி

## அழகியமணவாளன் விஷயம்

### எண்சீர்க் கழிநெடி லாசிரிய விருத்தம்

இருளிரியச் சுடர்மணிக ளிமைக்கும் நெற்றி
　　இனத்துத்தி யணிபணமா யிரங்க ளார்ந்த
அரவரசப் பெருஞ்சோதி யனந்த னென்னும்
　　அணிவிளங்கு முயர்வெள்ளை யணையை மேவி
திருவரங்கப் பெருநகருள் தெண்ணீர்ப் பொன்னி
　　திரைக்கையா லடிவருடப் பள்ளி கொள்ளும்
கருமணியைக் கோமளத்தைக் கண்டு கொண்டு என்
　　கண்ணிணைக ளென்று கொலோ களிக்கும் நாளே. (1)

வாயோரீ ரைஞ்ஞூறு துதங்க ளார்ந்த
　　வளையுடம்பி னழல்நாகம் உமிழ்ந்த செந்தீ
வீயாத மலர்ச்சென்னி விதானமே போல்
　　மேன் மேலும் மிக வெங்கும் பரந்த தன்கீழ்
காயாம்பூ மலர்ப்பிறங்க லன்ன மாலைக்
　　கடியரங்கத் தரவணையில் பள்ளி கொள்ளும்
மாயோனை மணத்தூணே பற்றி நின்றென்
　　வாயார என்றுகொலோ வாழ்த்து நாளே. (2)

எம்மாண்பி லயன்நான்கு நாவி னாலும்
　　எடுத்தேத்தி ஈரிரண்டு முகமுங் கொண்டு

எம்மாடு மெழிற்கண்களெட்டி னோடும்
தொழுதேத்தி யினி திறைஞ்ச நின்றசெம்பொன்
அம்மான்றன் மலர்க்கமலக் கொப்பூழ் தோன்ற
அணியரங்கத் தரவணையில் பள்ளி கொள்ளும்
அம்மான்ற னடி யிணைக்கி பூவர்க ளிட்டங்
கடியவரோ டென்றுகொலோ வணுகு நாளே. (3)

மாவினைவாய் பிளந் துகந்த பாலை வேலை
வண்ணனை என் கண்ணனைவன் குன்ற மேந்தி
ஆவினையன் றுயக்கொண்ட வாய ரேற்றை
அமரர்கள் தந் தலைவனை அந் தமி ழின்பப்
பாவினை அவ் வடமொழியைப் பற்றற் றார்கள்
பயிலரங்கத் தரவணையில் பள்ளி கொள்ளும்
கோவினைநா வுறவழுத்தி என்றன் கைகள்
கொய்மலர்தூ யென்றுகொலோ கூப்பு நாளே. (4)

இணையில்லா வின்னிசையாழ் கெழுமி யின்பத்
தும்புருவும் நாரதனு மிறைஞ்சி யேத்த
துணையில்லாத் தொன்மறைநூல் தோத்தி ரத்தால்
தொன்மலர்க்க ணயன் வணங்கி யோவா தேத்த
மணிமாட மாளிகைகள் மல்கு செல்வ
மதிளரங்கத் தரவணையில் பள்ளி கொள்ளும்
மணிவண்ண னம்மானைக் கண்டு கொண்டென்
மலர்ச்சென்னி என்றுகொலோ வணங்கும் நாளே. (5)

அளிமலர்மே லயனரனிந் திரனோடு ஏனை
அமரர்கள் தம் குழுவுமரம் பையரும் மற்றும்

தெளிமதிசேர் முனிவர்கள் தம் குழுவு முந்தித்
திசைதிசையில் மலர்தூவிச் சென்று சேரும்
களிமலர்சேர் பொழிலரங்கத் துரகமேறிக்
கண் வளரும் கடல் வண்ணர் கமலக் கண்ணும்
ஒளிமதிசேர் திருமுகமும் கண்டு கொண்டென்
உள்ளமிக வென்றுகொலோ வுருகும் நாளே. (6)

மறம்திகழு மனமொழித்து வஞ்ச மாற்றி
ஐம்புலன்க ளடங்கி யிடர்ப் பாரத் துன்பம்
துறந்துஇருமுப் பொழுதேத்தி யெல்லை யில்லாத்
தொன்னெறிக் கண் நிலைநின்ற தொண்ட ரான
அறம்திகழும் மனத்தவர்தம் கதியைப் பொன்னி
யணியரங்கத் தரவணையில் பள்ளி கொள்ளும்
திறம்திகழும் மாயோனைக் கண்டென் கண்கள்
நீர்மல்க வென்று கொலோ நிற்கும் நாளே. (7)

கோலார்ந்த நெடுஞ்சார்ங்கம் கூனற் சங்கம்
கொலையாழி கொடுந்தண்டு கொற்றவொள் வாள்
காலார்ந்த கதிக்கருட னென்னும் வென்றிக்
கடும்பறவை யிவையனைத்தும் புறஞ்சூழ் காப்ப
சேலார்ந்த நெடுங்கழனி சோலை சூழ்ந்த
திருவரங்கத் தரவணையில் பள்ளி கொள்ளும்
மாலோனைக் கண்டின்பக் கலவி யெய்தி
வல்வினையே னென்று கொலோ வாழு நாளே. (8)

தூராத மனக்காதல் தொண்டர் தங்கள்
குழாம்குழுமித் திருப்புகழ்கள் பலவும் பாடி

ஆராத மனக்களிப்போ டழுத கண்ணீர்
மழைசோர நினைந்துருகி யேத்தி நாளும்
சீரார்ந்த முழவோசை பரவை காட்டும்
திருவரங்கத் தரவணையில் பள்ளி கொள்ளும்
போராழி யம்மானைக் கண்டு துள்ளிப்
பூதலத்தி லென்று கொலோ புரளும் நாளே. (9)

வன்பெருவா னகமுய்ய வமர ருய்ய
மண்ணுய்ய மண்ணுலகில் மனித ருய்ய
துன்பமிகு துயரகல அயர்வொன் றில்லாச்
சுகம்வளர அகமகிழுந் தொண்டர் வாழ
அன்பொடுதென் திசைநோக்கிப் பள்ளி கொள்ளும்
அணியரங்கன் திருமுற்றத்து அடியார் தங்கள்
இன்பமிகு பெருங்குழுவு கண்டு யானும்
இசைந்துடனே என்றுகொலோ விருக்கும் நாளே. (10)

இடர்விளங்கு சரைப்பொன்னி நடுவு பாட்டுத்
திருவரங்கத் தரவணையில் பள்ளி கொள்ளுங்
கடல்விளங்கு கருமேனி யம்மான் றன்னைக்
கண்ணாரக் கண்டு கக்கும் காதல் தன்னால்
குடைவிளங்க விரல்தானைக் கொற்றவொள்வாள்
கூடவர்கோன் கொடைக்குலசே கரன்சொற் செய்த
நடைவிளங்கு தமிழ்மாலை பத்தும் வல்லார்
நலந்திகழ்நா ரணனடிக்கீழ் நண்ணு வாரே. (11)

---

## எழுசீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

தேட்டருந் திறல் தேனினைத் தென்னரங்கனைத் திருமாது வாழ்
வாட்டமில்வன மாலைமார்வனை வாழ்த்தி மால்கொள் சிந்தையராய்
ஆட்டமேவியலர்ந்தழைத்தயர் வெய்தும் மெய்யடியார்கள் தம்
ஈட்டம்கண்டிடக் கூடுமேலது காணும்கண்பயனாவதே (1)

தோடுலாமலர் மங்கைதோளிணைத் தோய்ந்ததும் சுடர் வாளியால்
நீடுமாமரம் செற்றதும்நிரை மேய்த்ததுமிவையேநினைந்து
ஆடிப்பாடி அரங்கவோஎன் றழைக்கும் தொண்டரடிப்பொடி
ஆடிநாம்பெறில் கங்கைநீர்குடைந் தாடும்வேட்கையென் னாவதே. (2

ஏறடர்த்ததுமேனமாய் நிலங் கீண்டதும்முன் னிராமனாய்
மாறடர்த்ததும் மண்ணளந்ததும் சொல்லிப்பாடிவணபொன்னிப்பே
ராறுபோல்வரும் கண்ணநீர்கொண் டரங்கன் கோயில் திருமுற்றம்
சேறுசெய்தொண்டர்சேவடிச்செழுஞ்சேறென் சென்னிக்கணிவனே.

தோய்த்ததண்டயிர் வெண்ணெய்பாலுடனுண்டலுமுடன்றாய்ச்சிக
ஆர்த்ததோளுடையெம்பிரானென்னரங்கனுக்கடியார்களாய் [ண்டு
நாத்தழும்பெழநாரணாவென்றழைத்துமெய்தழும்பத்தொழு
தேத்திஇன்புறும் தொண்டர்சேவடியேத்திவாழ்த்துமென்னெஞ்சமே.

பொய்சிலைக் குரலேற்றெருத் தமிறுத்துப் போரரவீர்த்தகோன்
செய்சிலைச்சுடர் சூழொளித் திண்ணமா மதிள்தென்னரங்கனாம்
மெய்சிலைக்கருமேகமொன்றுதம் நெஞ்சள்நின்று திகழப் போய
மெய்சிலிர்ப்பவர் தம்மையே நினைந் தென்மனம் மெய் சிலிர்க்குமே.

ஆதியந்த மனந் தமற்புதமானவானவர் தம்பிரான்
பாதமாமலர்சூடும்பத்தியிலாதபாவிகளுய்ந்திட
தீதில்நன்னெறிகாட்டியெங்கும்திரிந்தரங்கனெம்மானுக்கே [மே.
காதல்செய்தொண்டர்க் கெப்பிறப்பிலும் காதல்செய்யுமென்னெஞ்ச

காரினம்புரைமேனிநல்கதிர்முத்தவெண்ணகைச்செய்யவாய்
ஆரமார்வனரங்கனென்னும் அரும்பெருஞ்சுடரொன்றினை
சேரும்நெஞ்சினராகிச்சேர்ந்துகசிந்திழிந்தகண்ணீர்களால்
வாரநிற்பவர்தாளிணைக்குஒருவாரமாகுமென்னெஞ்சமே. (7)

மாலையுற்றகடற்கிடந்தவன்வண்டுகிண்டுநறுந்துழாய்
மாலையுற்றவரைப்பெரும்திருமார்வனைமலர்க்கண்ணனை
மாலையுற்றெழுந்தாடிப்பாடித்திரிந்தரங்கனெம்மானுக்கே
மாலையுற்றிடும்தொண்டர்வாழ்வுக்குமாலையுற்றதென்னெஞ்சமே. (8)

மொய்த்துக்கண்பனிசோரமெய்கள்சிலிர்ப்பஏங்கியிளைத்துநின்று
எய்த்துக்கும்பிடுநட்டமிட்டெழுந்தாடிப்பாடியிறைஞ்சிஎன்
அத்தனச்சனரங்கனுக்கடியார்களாகி அவனுக்கே
பித்தராமவர்பித்தரல்லர்கள்மற்றையார்முற்றும்பித்தரே. (9)

அல்லிமாமலர்மங்கைநாதனரங்கன்மெய்யடியார்கள்தம்
எல்லையிலடிமைத்திறத்தினிலென்றுமேவுமனத்தனும்
கொல்லிகாவலன்கூடல்நாயகன்கோழிக்கோன்குலசேகரன்
சொல்லினின்தமிழ்மாலைவல்லவர்தொண்டர்தொண்டர்களாவரே(10)

---

## கலி விருத்தம்

மெய்யில் வாழ்க்கையை மெய்யெனக் கொள்ளும் இவ்
வையந் தன்னொடும் கூடுவ தில்லை யான்
ஐயனே அரங் காவென் றழைக் கின் றேன்
மையல் கொண்டொழிந் தேனென்றன் மாலுக்கே (1)

நூலி னேரிடை யார்திறத்தே நிற்கும்
ஞாலத் தன்னொடும் கூடுவ தில்லை யான்
ஆலி யா அழை யா அரங்கா வென்று
மாலெழுந் தொழிந்தே னென்றன் மாலுக்கே (2)

மார ஞர்வரி வெஞ்சிலைக் காட் செய்யும்
பாரி ஞரொடும் கூடுவ தில்லை யான்
ஆர மார்வ னரங்கன நந்தன் நல்
நார ணன் நர காந்த கன் பித்தனே. (3)

உண்டியே யுடையே யுகந் தோடும் இம்
மண்டலத் தொடும் கூடுவ தில்லை யான்
அண்டவா ணனரங்கன் வன் பேய் முலை
உண்ட வாயன்ற னுன் மத்தன் காண் மினே. (4)

தீதில் நன்னெறி நிற்க அல் லாது செய்
நீதி யாரொடும் கூடுவ தில்லை யான்
ஆதி ஆயன ரங்கன் அந்தா மரைப்
பேதைமா மணவாளன் றன்பித் தனே. (5)

எம்பரத் தால் லாரொடும் கூட லன்
உம்பர் வாழ்வை யொன் ருகக் கருத லன்
தம்பி ரானம ரர்க்குஅரங் கநகர்
எம்பி ரானுக் கெழுமையும் பித் தனே. (6)

எத்தி றத்திலும் யாரொடும் கூடும் அச்
சித்தந் தன்னைத் தவிர்த் தனன் செங்கண் மால்
அத்தனே அரங்கா வென் றழைக் கின்றேன்
பித்த னயொழிந் தேனெம்பிரா னுக்கே. (7)

பேயரே யெனக்கியா வரும் யானு மோர்
பேயனே யெவர்க்கும் இதுபேசி யென்
ஆயனே அரங்கா என் றழைக் கின் றேன்
பேய னயொழிந் தேனம்பிரா னுக்கே. (8)

அங்கை யாழி யரக்க னடி யிணை
தங்கு சிந்தைத் தனிப் பெரும் பித்த னாய்
கொங்கர் கோன் குல சேகரன் சொன்ன சொல்
இங்கு வல்லவர்க் கேதமொன் றில்லையே (9)

---

## திருவேங்கடமுடையான் விஷயம்

### தாவுகோச்சக்கலிப்பா

ஊனேறு செல்வத் துடற் பிறவி யான் வேண்டேன்
ஆனேறேழ் வென்றா னடிமைத் திற மல்லால்
கூனேறு சங்க மிடத்தான் தன் வேங் கடத்துக்
கோனேரி வாழும் குருகாய்ப் பிறப்பேனே. (1)

ஆனாத செல்வத் தரம்பை யர்கள் தற் சூழ
வானாளும் செல்வமும் மண்ணரசும் யான் வேண்டேன்
தேனார் பூஞ் சோலைத் திருவேங் கடச் சுனையில்
மீனாய்ப் பிறக்கும் விதியுடையே னாவேனே. (2)

பின்னிட்ட சடையானும் பிரமனு மிந்தி ரனும்
துன்னிட்டுப் புகலரிய வைகுந்த நீள்வாசல்
மின்வட்டச் சுடராழி வேங்கடக்கோன் தானுமிழும்
பொன்வட்டில் பிடித்துடனே புகப்பெறுவே னாவேனே. (3)

ஒண்பவள வேலை யுலவு தண் பாற் கடலுள்
கண்டுயிலும் மாயோன் கழலிணைகள் காண்ப தற்குப்
பண்பகரும்வண் டினங்கள் பண் பாடும் வேங் கடத்துச்
செண்பகமாய் நிற்கும் திருவுடையே னாவேனே. (4)

கம்பமத யானைக் கழுத்தகத்தின் மேலிருந்து
இன்பமரும் செல்வமு மிவ்வரசும் யான்வேண்டேன்
எம்பெருமா னீச னெழில்வேங் கட மலைமேல்
தம்பகமாய் நிற்கும் தவமுடைய னாவேனே. (5)

மின்னனைய நுண்ணிடையா ருருப்பசியும் மேனகையும்
அன்னவர்தம் பாடலொடு மாடலவை யாதரியேன்
தென்னவென வண்டினங்கள் பண்பாடும் வேங்கடத்துள்
அன்னனைய பொற்குவடா மருந்தவத்த னாவேனே. (6)

வானாளும் மாமதிபோல் வெண்குடைக்கீழ் மன்னவர் தம்
கோனாகி வீற்றிருந்து கொண்டாடும் செல்வறியேன்
தேனார்பூஞ் சோலைத் திருவேங் கடமலை மேல்
கானாறாய்ப் பாயும் கருத்துடையே னாவேனே. (7)

பிறையேறு சடையானும் பிரமனு மிந்திரனும்
முறையாய பெருவேள்விக் குறை முடிப்பான் மறையானான்
வெறியார்தண் சோலைத் திருவேங்கட மலைமேல்
நெறியாய்க் கிடக்கும் நிலையுடையே னாவேனே. (8)

செடியாய வல்வினைகள் தீர்க்கும் திருமாலே
நெடியானே வேங்கடவா நின்கோயி லின்வாயில்
அடியாரும் வானவரு மரம்பையரும் கிடந் தியங்கும்
படியாய்க் கிடந்துன் பவளவாய் காண் பேனே. (9)

உம்ப ருலகாண் டொருகுடைக்கீழ் உருப்பசிதன்
அம்பொற் கலையல்குல் பெற்றாலு மாதரியேன்
செம்பவள வாயான் திருவேங் கடமென்னும்
எம்பெருமான் பொன்மலைமே லேதேனு மாவேனே. (10)

மன்னியதண் சாரல் வடவேங் கடத்தான்றன்
பொன்னியலும் சேவடிகள் காண்பான் புரிந் திறைஞ்சி
கொன்னவிலும் கூர்வேல் குலசே கரன் சொன்ன
பன்னியநூல் தமிழ் வல்லார் பாங்காய பத்தர்களே. (11)

---

## வித்துவக்கோட்டம்மான் விஷயம்

---

தரவுகோச்சகக்கலிப்பா

தருதுயரம் தடாயேலுன் சரணல்லால் சரணில்லை
விரைகுழுவு மலர்ப்பொழில்சூழ் வித்துவக்கோட் டம்மானே
அரிசினத்தா லீன்றதா யகற்றிடினும் மற்றவள் தன்
அருள்நினைந்தே யழும்குழவி யதுவேபோன் றிருந்தேனே(1)

கண்டா ரிகழ்வனவே காதலன்றான் செய்திடினும்
கொண்டானை யல்லா லறியாக் குலமகள்போல்
விண்டோய் மதிள்புடைசூழ் வித்துவக்கோட் டம்மா நீ
கொண்டாளா யாகிலுமுன் குரைகழலே கூறுவனே. (2)

மீன் நோக்கும் நீள்வயல்சூழ் வித்துவக்கோட் டம்மா என்
பால்நோக்கா யாகிலுமுன் பற்றல்லால் பற்றிலேன் ·
தான்நோக்கா தெத்துயரம் செய்திடினும் தார் வேந்தன்
கோல்நோக்கி வாழும் குடிபோன்றிருந் தேனே. (3)

வாளா லறுத்துச் சுடினும் மருத்துவன்பால்
மாளாத காதல்நோ யாளன்போல் மாயத்தால்
மீளாத் துயர்தரினு வித்துவக்கோட் டம்மா நீ
ஆளா வுனதருளே பார்ப்ப னடியேனே

வெங்கட்டின் களிறடர்த்தாய் வித்துவக்கோட் டம்மானே
எங்குப்போ யுய்கேனுன் னிணையடியே யடை யல்லால்
எங்கும்போய்க் கரைகாணு தெறிகடல்வாய் மீண்டேயும்
வங்கத்தின் கூம்பேறும் மாப்பறவை போன் றேனே. (5)

செந்தழலே வந்தழலைச் செய்திடினும் செங்கமலம்
அந்தரஞ்சேர் வெங்கதிரோற் கல்லா லலராவால்
வெந்துயர்வீட் டாவிடினும் வித்துவக்கோட் டம்மாஉன்
அந்தமில்சீர்க் கல்லா லகங்குழைய மாட் டேனே. (6)

எத்தனையும் வான்மறந்த காலத்தும் பைங்கூழ்கள்
மைத்தெழுந்த மாமுகிலே பார்த்திருக்கும் மற்றவைபோல்
மெய்த்துயர்வீட் டாவிடினும் வித்துவக்கோட் டம்மா என்
சித்தமிக வுன்பாலே வைப்ப னடியேனே. (7)

தொக்கிலங்கி யாறெல்லாம் பரந்தோடித் தொடுகடலே
புக்கன்றிப் புறம்நிற்க மாட்டாத மற்றவை போல்
மிக்கிலங்கு முகில்நிறத்தாய் வித்துவக்கோட் டம்மா உன்
புக்கிலங்கு சீரல்லால் புக்கிலன் காண் புண்ணியனே. (8)

நின்னையே தான் வேண்டி நீள்செல்வம் வேண்டா தான்
தன்னையே தான் வேண்டும் செல்வம்போல் மாயத்தால்
மின்னையே சேர்திகிரி வித்துவக்கோட் டம்மா
நின்னையே தான்வேண்டி நிற்பன் அடியேனே. (9)

வித்துவக்கோட் டம்மாநீ வேண்டாயே யாயிடினும்
மற்றாரும் பற்றிலே னென்று அவனைத் தாள்நயந்து
கொற்றவேல் தானைக் குலசே கரன்சொன்ன
நற்றமிழ்பத் தும்வல்லார் நண்ணார் நரகமே. (10)

## கண்ணபுரத்தொளிர் காகுத்தன்றாலாட்டு

### தரவுகொச்சகக்கலிப்பா

மன்றுபுகழ் கௌசலைதன் மணிவயிறு வாய்த்தவனே
தென்னிலங்கைக் கோன்முடிகள் சிந்துவித்தாய் செம்பொன்சேர்
கன்னிநன்மா மதிள்புடைசூழ் கணபுரத்தென் கருமணியே
என்னுடைய வின்னமுதே இராகவனே தாலேலோ. (1)

புண்டரிக மலரதன்மேல் புவனியெல்லாம் படைத்தவனே
திண்டிறலாள் தாடகைதன் உரமுருவச் சிலைவளைத்தாய்
கண்டவர்தம் மனம்வழங்கும் கணபுரத் தென்கருமணியே;
எண்டிசையு மாளுடையாய் இராகவனே தாலேலோ. (2)

கொங்குமலி கருங்குழலாள் கௌசலைதன் குலமதலாய்
தங்குபெரும் புகழ்ச்சனகன் திருமருகா தாசரதி
கங்கையிலும் தீர்த்தமலி கணபுரத்தென் கருமணியே
எங்கள்குலத் தின்னமுதே! இராகவனே தாலேலோ. (3)

தாமரைமே லயனவனைப் படைத்தவனே தயரதன்றன்
மாமதலாய் மைதிலிதன் மணவாளா வண்டினங்கள்
காமரங்க ளிசைபாடும் கணபுரத்தென் கருமணியே
ஏமருவும் சிலைவலவா! இராகவனே! தாலேலோ. (4)

பாராளும் படர்செல்வம் பரதநம்பிக் கேயருளி
ஆராவன் பிளையவனோ டருங்கான மடைந்தவனே
சீராளும் வரைமார்பா! திருக்கண்ண புரத்தரசே!
தாராளும் நீண்டமுடியன் தாசரதி! தாலேலோ. (5)

சுற்றமெல்லாம் பின்தொடரத் தொல்கான மடைந்தவனே
அற்றவர்க் கருமருந்தே அயோத்திநகர்க் கதிபதியே

கற்றவர்கள் தாம்வாழும் கணபுரத்தென் கருமணியே
சிற்றவைதன் சொல்கொண்ட சிராமா தாலேலோ. (6)

ஆலினிலைப் பாலகனா யன்றுலக முண்டவனே
வாலியைக்கொன் றரசிளைய வானரத்துக் களித்தவனே
காலின்மணி கரையலைக்கும் கணபுரத்தென் கருமணியே!
ஆலிநகர்க் கதிபதியே! அயோத்திமனே! தாலேலோ. (7)

மலையதனா லணைகட்டி மதிளிலங்கை அழித்தவனே
அலைகடலைக் கடைந்தமரர்க் கமுதருளிச் செய்தவனே
கலைவலவர் தாம்வாழும் கணபுரத்தென் கருமணியே
சிலைவலவா! சேவகனே! சிராமா தாலேலோ. (8)

தளையவிழும் நறுங்குஞ்சித் தயரதன்றன் குலமதலாய்!
வளையவொரு சிலையதனால் மதிளிலங்கை யழித்தவனே
களைகழுநீர் மருங்கலரும் கணபுரத்தென் கருமணியே
இளையவர்கட் கருளுடையாய் இராகவனே தாலேலோ. (9)

தேவரையு மசுரரையும் திசைகளையும் படைத்தவனே
யாவரும்வந் தடிவணங்க அரங்கநகர்த் துயின்றவனே
காவிரிநல் நதிபாயும் கணபுரத்தென் கருமணியே
ஏவரிவெஞ் சிலைவலவா இராகவனே! தாலேலோ. (10)

கன்னிநன்மா மதிள்புடைசூழ் கணபுரத்தென் காகுத்தன்
தன்னடிமேல் தாலேலோ வென்றுரைத்த தமிழ்மாலை
கொல்நவிலும் வேல்வலவன் குடைக்குல சேகரன்சொன்ன
பண்ணியநூல் பத்தும்வல்லார் பாங்காய பத்தர்களே. (11)



---

அறுசீர்க்கழிநெடிலாசிரிய விருத்தம்

வன்தாளி னிணைவணங்கி வளநகரம்
தொழுதேத்த மன்ன னுவான்
நின்றாயை அரியணைமே லிருந்தாயை
நெடுங்கானம் படரப் போகு
வென்றாள்எம் மிராமாவோ உனைப்பயந்த
கைகேசி தன்சொற் கேட்டு
நன்றாக நானிலத்தை யாள்வித்தேன்
நன்மகனே யுன்னை நானே (1)

வெவ்வாயேன் வெவ்வுரைகேட் டிருநிலத்தை
வேண்டாதே விரைந்து வென்றி
மைவாய களிறொழிந்து தேரொழிந்து
மாவொழிந்து வனமே மேவி
நெய்வாய வேல்நெடுங்கண் நேரிழையு
மிளங்கோவும் பின்பு போக
எவ்வாறு நடந்தனையெம் மிராமாவோ
எம்பெருமா னென்செய் கேனே (2)

கொல்லணைவேல் வரிநெடுங்கண் கௌசலைதன்
குலமதலாய் குனிவில் லேந்தும்
மல்லணைந்த வரைத்தோளா வல்வினையேன்
மனமுருக்கும் வகையே கற்றாய்
மெல்லணைமேல் முன்துயின்றா யின்றினிப்போய்
வியன்கான மரத்தின் நீழல்
கல்லணைமேல் கண்டுயிலக் கற்றனையோ
காகுத்தா கரிய கோவே. (3)

வாபோகு வாஇன்னம் வந்தொருகால்
கண்டுபோ மலராள் கூந்தல்
வேய்போலு மெழில்தோளி தன்பொருட்டா
விடையோன் றன் வில்லைச் செற்றாய்
மாபோகு நெடுங்கானம் வல்வினையேன்
மனமுருக்கும் மகனே இன்று
நீபோக வென்னெஞ்ச மிருபிளவாய்ப்
போகாதே நிற்கு மாறே. (4)

பொருந்தார்கை வேல்நுதிபோல் பரல்பாய
மெல்லடிகள் குருதி சோர
விரும்பாத கான்விரும்பி வெயிலுறைப்ப
வெம்பசிநோய் கூர இன்று
பெரும்பாவி யேன் மகனே போகின்றாய்
கேகயர் கோன் மகளாய்ப் பெற்ற
அரும்பாவி சொற்கேட்ட வருவினையேன்
என்செய்கே னந்தோ யானே. (5)

அம்மாவென் றுகந்தழைக்கு மார்வச்சொல்
கேளாதே அணிசேர் மார்வம்
என்மார்வத் திடையழுந்தத் தழுவாதே
முழுசாதே மோவா துச்சி
கைம்மாவின் நடையன்ன மென்னடையும்
கமலம்போல் முகமும் காணாது
எம்மானை யென்மகனை யிழந்திட்ட
இழிதகையே னிருக்கின் றேனே. (6)

பூமருவு நறுங்குஞ்சி புன்சடையாப்
புனைந்துபூந் துகில்சே ரல்குல்
காமரெழில் விழலுடுத்துக் கலனணியா
தங்கங்க ளழகு மாறி

எமருதோ ளென்புதல்வன் யானின்று
செலத்தக்க வனந்தான் சேர்தல்
அமறையி ரிதுதகவோ சுமந்திரனே
வசிட்டனே சொல்லீர் நீரே. (7)

பொன்பெற்று ரெழில்வேதப் புதல்வனையும்
தம்பியையும் பூவை போலும்
மின்பற்று நுண்மருங்குல் மெல்லியலென்
மருகியையும் வனத்தில் போக்கி
நின்பற்று நின்மகன்மேல் பழிவிளைத்திட்
டென்னையும்நீள் வானில் போக்க
என்பெற்றாய் கைகேசி யிருநிலத்தி
லினிதாக விருக்கின் றாயே. (8)

முன்னொருநாள் மழுவாளி சிலைவாங்கி
யவன்தவத்தை முற்றும் செற்றாய்
உன்னையுமுன் னருமையையு முன்மோயின்
வருத்தமுமொன் றாகக் கொள்ளாது
என்னையுமென் மெய்யுரையும் மெய்யாகக்
கொண்டுவனம் புக்க வெந்தாய்
நின்னையே மகனாகப் பெறப்பெறுவே
னேழ்பிறப்பும் நெடுந்தோள் வேந்தே. (9)

தேனகுமா மலர்க்கூந்தல் கௌசலையும்
சுமித்திரையும் சிந்தை நோவக்
கூனுருவில் கொடுந்தொழுத்தை சொற்கேட்ட
கொடியவள்தன் சொற்கொண்டு இன்று
கானகமே மிகவிரும்பி நீ துறந்த
வளநகரைத் துறந்து நானும்
வானகமே மிகவிரும்பிப் போகின்றேன்
மனுகுலத்தார் தங்கள் கோவே. (10)

வாரார்ந்த கருநெடுமா லிராமனைப்
வனம்புக்க வதனுக் காற்றா
தாரார்ந்த தடவரைத்தோள் தயரதன்றான்
புலம்பியவப் புலம்பல் தன்னைக்
கூரார்ந்த வேல்வலவன் கோழியர்கோன்
குடைக்குலசே கரன்சொற் செய்த
சீரார்ந்த தமிழ்மாலை யிவைவல்லார்
தீநெறிக்கண் செல்லார் தாமே. (11)

---

## தில்லைநகர்த் திருச்சித்திரகூடமால்
## தொல்லிராமனைத் தோன்றிய கதைமுறை

---

எண்சீர்க்கழிநெடிலாசிரிய விருத்தம்

அங்கணெடு மதிள்புடைசூ ழயோத்தி யென்னும்
அணிநகரத் துலகனைத்தும் விளக்கும் சோதி
வெங்கதிரோன் குலத்துக்கோர் விளக்காய்த்தோன்றி
விண்முழுது முயக்கொண்ட வீரன் றன்னைச்
செங்கணெடுங் கருமுகிலை யிராமன் றன்னைத்
தில்லைநகர்த் திருச்சித்ர கூடந் தன்னுள்
எங்கள்தனி முதல்வனையெம் பெருமான் றன்னை
யென்றுகொலோ கண்குளிரக் காணு நாளே. (1)

வந்தெதிர்ந்த தாடகைத னுரத்தைக் கீறி
வருகுருதி பொழிதரவன் கணையொன் றேவி
மந்திரங்கொள் மறைமுனிவன் வேள்வி காத்து
வல்லரக்க ருயிருண்ட மைந்தன் காண்மின்

செந்தளிர்வாய் மலர்நகைசேர் செழுந்தண் சோலைத்
தில்லைநகர்த் திருச்சித்ர கூடந் தன்னுள்
அந்தணர்க ளொருமூவா யிரவ ரேத்த
அணிமணியா சனத்திருந்த வம்மான் றானே. (2)

செவ்வரிநற் கருநெடுங்கண் சீதைக்காகிச்
சினவிடையோன் சிலையிறுத்து மழுவா ளேந்தி
வெவ்வரிநற் சிலைவாங்கி வென்றி கொண்டு
வேல்வேந்தர் பகைதடிந்த வீரன் றன்னைத்
தெவ்வரஞ்சு நெடும்புரிசை யுயர்ந்த பாங்கர்த்
தில்லைநகர்த் திருச்சித்ர கூடந் தன்னுள்
எவ்வரிவஞ் சிலைத்தடக்கை யிராமன் றன்னை
யிறைஞ்சுவா ரிணையடியே யிறைஞ்சி னேனே. (3)

தொத்தலர்பூஞ் சுரிகுழல்கை கேசி சொல்லால்
தொன்னகரந் துறந்து துறைக் கங்கை தன்னை
பத்தியுடைக் குகன் கடத்த வனம்போய்ப் புக்குப்
பரதனுக்குப் பாதுகமு மரசுமீந்து
சித்திரகூ டத்திருந்தான் றன்னை யின்று
தில்லைநகர்த் திருச்சித்ர கூடந் தன்னுள்
எத்தனையும் கண்குளிரக் காணப் பெற்ற
இருநித்தார்க் கிமையவர்கே ரொவ்வார் தாமே. (4)

வலிவணக்கு வரைநெடுந்தோள் விராதைக் கொன்று
வண்டமிழ்மா முனிகொடுத்த வரிவில் வாங்கி
கலைவணக்கு நோக்கரக்கி மூக்கை நீக்கிக்
கரனோடு தூடணன்ற னுயிரை வாங்கி

மலைவணக்கி மான்மறிய வெய்தான் றன்னைத்
தில்லைநகர்த் திருச்சித்ர கூடந் தன்னுள்
தலைவணங்கிக் கைகூப்பி யேத்த வல்லார்
திரிதலால் தவமுடைத்தித் தரணி தானே. (5)

தனமருவு வைதேவி பிரிய லுற்றுத்
தளர்வெய்திச் சடாயுவைவை குந்தத் தேற்றி
வனமருவு கவியரசன் காதல் கொண்டு
வாலியைக் கொன் றிலங்கைநக ரரக்கர் கோமான்
சினமடங்க மாருதியால் சுடுவித் தானைத்
தில்லைநகர்த் திருச்சித்ர கூடந் தன்னுள்
இனிதமர்ந்த வம்மானை யிராமன் றன்னை
யேத்துவா ரிணையடியே யேத்தி னேனே. (6)

குரைகடலை யடலம்பால் மறுக வெய்து
குலைகட்டி மறுகரையை யதனு லேறி
எரிநெடுவே லரக்கரொடு மிலங்கை வேந்தன்
இன்னுயிர்கொண் டவன் தம்பிக் கரசு மீந்து
திருமகளோ டினிதமர்ந்த செல்வன் றன்னைத்
தில்லைநகர்த் திருச்சித்ர கூடந் தன்னுள்
அரசமர்ந்தா னடிசூடு மரசை யல்லால்
அரசாக வெண்ணேன்மற் றரசு தானே. (7)

அம்பொனெடு மணிமாட வயோத்தி யெய்தி
அரசெய்தி அகத்தியன்வாய்த் தான்முன் கொன்றான்
றன்பெருந்தொல் கதைகேட்டு மிதிலைச் செல்வி
யுலகுய்யத் திருவயிறு வாய்த்த மக்கள்
செம்பவளத் திரள்வாய்த்தன் சரிதை கேட்டான்
தில்லைநகர்த் திருச்சித்ர கூடந் தன்னுள்

எம்பெருமான் றன்சரிதை செவியால் கண்ணால்
பருகுவோ மின்னமுதை மதியோ மின்றே. (8)

செறிதவச்சம் புகன்றன்னைச் சென்று கொன்று
செழுமறையோ னுயிர்மீட்டுத் தவத்தோனீந்த
நிறைமணிப்பூ ணணியுங்கொண் டிலவணன் றன்னைத்
தம்பியால் வானேற்றி முனிவன் வேண்டத்
திறல்விளங்கு மிலக்குமனைப் பிரிந்தான் றன்னைத்
தில்லைநகர்த் திருச்சித்ர கூடந்தன்னுள்
உறைவானை மறவாத வுள்ளந் தன்னை
யுடையோம்மற் றுறுதுயர மடையோ மின்றே. (9)

அன்றுசரா சரங்களைவை குந்தத் தேற்றி
அடலரவப் பகையேறி யசுரர் தம்மை
வென்று இலங்கு மணிநெடுந்தோள் நான்கும் தோன்ற
விணைமுழுது மெதிர்வரத்தன் தாம் மேவி
சென்றினிது வீற்றிருந்த வம்மான் றன்னைத்
தில்லைநகர்த் திருச்சித்ர கூடந்தன்னுள்
என்றுமின்று னவனிவனென் றேத்தி நாளு
மிறைஞ்சுமினோ வெப்பொழுதும் தொண்டீர் நீரே. (10)

தில்லைநகர்த் திருச்சித்திர கூடந்தன்னுள்
திறல்விளங்கு மாருதியோ டமர்ந்தான் றன்னை
எல்லையில்சீர்த் தயரதன்றன் மகனாய்த் தோன்றிற்
றதுமுதலாத் தன்னுலகம் புக்க தீருக்
கொல்லியலும் படைத்தானைக் கொற்ற வொள்வாள்
கோழியர்கோன் குடைக்குலசே கரன்சொற் செய்த
நல்லியலின் தமிழ்மாலை பத்தும் வல்லார்
நலந்திகழ்நா ரணனடிக்கிழ் நண்ணுவாரே. (11)

முற்றிற்று.

4, 5-வது வகுப்புகளுக்கு உபபாடமாக வைக்கத் தகுந்த புத்தகங்கள்.

---

| | |
|---|---|
| வாலி சரிதை | 0—2—6 |
| பாலர் நன்மதிக் கதைகள் | 0—4—0 |
| குமரக்கடவுள் | 0—6—0 |
| நற்பெண்டிர் | 0—4—0 |
| நற்புதல்வர்கள் | 0—4—0 |
| மகாராணி மங்கம்மாள் | 0—3—0 |
| கர்ணன் கதை | 0—4—0 |

## நேச்சர்ஸ்டடி

என்ற

## இயற்கைப் பொருட் பாடம்.

R. சவரிமுத்து அவர்கள் எழுதியது.

இப்புத்தகத்தில் கடவுளின் இயற்கையால் அமைக்கப்பட்ட பிராணிகளின் பாடங்களும் தாவர பாடங்களும் நீர் வாழ்வன நிலவாழ்வன பாடங்களும் தொகுத்து எழுதப் பெற்றிருப்பது. விலை அணா 5

## எலிமெண்டரி பாடசாலைக்குரிய

## நீதிப்பாடங்கள்.

| | |
|---|---|
| உலகநீதி மூலமும் உரையும் | 0—0—9 |
| ஆத்திச்சூடி மூலமும் உரையும் | 0—0—9 |
| கொன்றைவேந்தன் மூலமும்உரையும் | 0—0—9 |
| வெற்றிவேற்கை மூலமும்உரையும் | 0—0—9 |
| வாக்குண்டாம் மூலமும்உரையும் | 0—0—9 |

## எங்களால் பிரசுரிக்கப்பெற்ற மேல்வ புத்தகங்கள்.

| | |
|---|---|
| நவீன தமிழ் வாசகம் (I Form) | 0—7—0 |
| நவீன தமிழ் வாசகம் (II Form) | 0—8—0 |
| நவீன தமிழ் வாசகம் (III Form) | 0—8—0 |
| கடையேழு வள்ளல்கள் | 0—10—0 |
| தமிழ்நாட்டுப் புலவர்கள் | 0—8—0 |
| பொய்யாமொழிப் புலவர் சரித்திரம் | 0—8—0 |
| ஸ்ரீராம விஜயம் | 0—10—0 |
| பதினேழு மலர்கள் | 0—7—0 |
| செய்யுட்பாடக்கோவை I-ம் பாகம் | 0—8—0 |
| யாக்ஞவல்கியம் | 0—9—0 |
| ஆழ்வார் ஸ்ரீகுலசேகரர் | 0—6—0 |
| குமரக்கடவுள் | 0—6—0 |
| கவிக்குலகாவலன் | 0—7—0 |

### பிரதம வகுப்பிற்குரிய கணிதப்புத்தகங்கள்

| | |
|---|---|
| புதிய பிரதம கணிதம் (முதற்புத்தகம்) 1, 2 வகுப்புகளுக்கு | 0—5—0 |
| ஷை (இரண்டாம் புத்தகம்) 3-வது வகுப்புக்கு | 0—5—0 |
| ஷை (மூன்றும் புத்தகம்) 4-வது வகுப்புக்கு | 0—6—0 |
| ஷை (நான்காம் புத்தகம்) 5-வது வகுப்புக்கு | 0—8—0 |

பி. நா. சிதம்பர முதலியார் பிரதர்ஸ்
புக்ஸெல்லர்ஸ் அண்டு பப்ளிஷர்ஸ்
மதராஸ் & மதுரை